# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!

நைஸில்
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.

2
பேக்குகளில்—
'ப்ளு' மற்றும்
'ஸாண்டல்வுட்'




வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
பால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!



மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:

1. அதிக-வியர்வை
யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை
உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்
படுத்தும் கிருமி
களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத
மளிக்கிறது.

GN-79-PR-TM

## இவர்களுக்கு ஒட்டாது! அதுஎன்ன?

(விடை 55 ம் பக்கம்)


சரிதா


ஜெயலலிதா


சீர்காழி கோவிந்தராஜன்


எஸ். வி. சேகர்


ஜேசுதாஸ்


சுகாசினி


ஸ்ரீவித்யா




குன்னக்குடி வைத்தியநாதன்


சிவாஜி கணேசன்


கமலதா


கமலஹாசன்


எம். பி. சீனிவாசன்


டாக்டர் சந்தோஷம்


சேலம் ஜெயலட்சுமி


ஸ்மிதா


வலையப்பட்டி சுப்பிரமணியம்


பந்த அருணாசலம்


ராஜ்குமார்

## இவர்களுக்கு ஒட்டும்!


ஏ.வி.எம். சரவணன்

# பாகிஸ்தானில் பெற்ற படுதோல்விகள்! -ஓர் அலசல்

**பி. என். சுந்தரேசன்**

"வெற்றிபெற்றால் எங்கள்நாட்டுமக்கள் ரொம்பத் தாராளமாகப் பாராட்டுவார்கள்; தோல்வி அடைந்தால் காப்டன்தான் அத்தனை வசை அம்புகளையும் தாங்க வேண்டும்'' என்று கூறியவர் பிஷென் சிங் பேடி. தாம் காப்டனாக இருந்தபோது ஒரு பேட்டியில் இவ்வாறு கூறிய அவர்தான் 1978ல் இந்திய அணி பாகிஸ்தானிடம் தோற்றபோது அத்தனை வசை அம்புகளையும் தாங்க வேண்டியிருந்தது. இப்போது கனில் கவாஸ்கரின் முறை! காப்டன் பதவியிலிருந்து அவர் நீக்கப்பட்டு அவரிடத்தில் கபில்தேவ் மேற்கிந்தியத் தீவுகள் விஜயத்துக்கு நியமிக்கப்பட்டிருக்கிறார்.

பாகிஸ்தானிடம் இப்போது கவாஸ்கர் அடைந்த தோல்வி முன்னர் பேடி அடைந்தததை விடவும் படுமோசமானது. மூன்று டெஸ்ட்களில் செமை உதை! இரண்டு டெஸ்ட்களில் இன்னிங்ஸ் தோல்வி; மற்றொன்றில் பத்து விக்கெட் தோல்வி. மகத்தான பாட்ஸ்மேனுன கவாஸ்கர் காப்டன் என்ற முறையில் பாதுகாப்பான ஆட்டப் பாணியைக் கையாளுகிறார். இதே பாதுகாப்புப் பாணியைக் கையாண்ட காப்டன் ஃபிளெட்சருடன் மோதிய போது கவாஸ்கரால் அவரை வெல்ல முடிந்தது. ஆனால் இம்ரான்கானின் தலைமைப் பாணி இதற்கு நேர்மாறானது. கோட்டைக்குள் பதுங்காமல் வெளியே வந்து தாக்குகிற ஆட்டத் தந்திரம் இம்ரானுடையது. இவரிடம் கவாஸ்கரின் ஜம்பம் சாயவில்லை.

கவாஸ்கருக்கும் இம்ரான் கானுக்கும் இடையில் இதுவே முக்கியமான வித்தியாசம். மற்றொரு வேற்றுமை அவரவர் டீமின் ஆற்றல். எந்த விதமாகப் பார்த்தாலும் இம்ரான்கானின் அணி பலமானது. சாம்பியன் பாஸ்ட்ஸ்மனுன ஜஹீர் அப்பாஸ் பிரமாதமான உற்சாகத்துடன் இருந்தார். முதல் மூன்று டெஸ்ட்களில் ஒரு இரட்டை சதமும், இரு சதங்களும் அடித்தார். அவ்வாறே முதாஸ்ஸார் நஸ்ஸாரும், ஜாவேத் மியான் தாதும் அகோரப் பசியுடன் ரன்களைக் குவித்தனர். மூன்ருவது விக்கெட் பார்ட்னர்ஷிப்பில் அவர்கள் குவித்த 451 ரன்களில் இருவருமே இரட்டை சதம் போட, அது உலகரிக்கார்ட் ஆகியது. மேலும் ஸலிம் மாலிக், இம்ரான்கான் ஆகியோரும் கூடை கூடையாக ரன்களைச் சேகரித்தனர்.

இந்த டெஸ்ட் தொடரில் பாகிஸ்தான் பாட்டிங் பலவீனமடைந்தது என்று சொல்லும்படியான காலகட்டம் ஒரு தருணத்தில் கூடத் தோன்றவில்லை. இதற்கு மறுபுறமாக பாகிஸ்தான் வீரர்களுக்குப் போதிய அளவு சவாலாக விளங்கிய பந்துவீச்சை நம் தரப்பில் ஒரு சமயத்திலும் பார்க்க முடியவில்லை. கபில் மட்டும் விதிவிலக்கு. சமீப காலத்தில் திலீப் தோஷியின் ஸ்பின் போலிங்மீது இந்தியா ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தது. ஆனால் அவர் காற்றுப் போன பலூனுகிவிட்டார். மானிந்தர் சிங் நன்றாகப் பந்து வீசினாலும் முதல்தர பாட்ஸ்மன்களை வீழ்த்துவதற்குரிய நுணுக்கங்



✱ கபில்தேவ்



✱ டெஸ்ட் ஆட்டத்துக்குத் திரும்ப அழைக்கப்பட்டுள்ள வெங்கட்.



✱ கவாஸ்கர்

களை அவர் இனிமேல்தான் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஒரே ஒரு டெஸ்டில் ஆடிய ரவி சாஸ்திரி பந்து வீசியதை விடச் சிறப்பாக பேட் செய்தார். டெஸ்ட் தொடரின் மத்தியில் மதன் லால் காயம் பட்டு வெளியேறிவிட, கபில்தேவ் தனியொருவராகவே போராட வேண்டியிருந்தது. பலவீனமான இந்த இந்தியத் தாக்குதல், அசிரத்தையான ஃபீல்டிங் காரணமாக மேலும் பலவீனமுற்றது.

இருப்பினும், ரன்களை ஏகமாகக் குவிப்பதில் பாகிஸ்தான் வீரர்கள் அபார ஆற்றலைக் காட்டிய போதிலும் இந்தியா டிராவுக்காவது விளையாடி யிருக்க முடியும் — இந்தியாவை விட்டுக் கிளம்பியபோது நமது பாட்ஸ்மன்களுக்கு இருந்த புகழை அவர்கள் காப்பாற்றிக் கொள்ள முனைந்திருந்தால். ஆனால் அவர்களுக்கிருந்த நற்பெயரைத் தமது அற்புதப் பந்து வீச்சினால் தவிடு பொடியாக்கி விட்டார் இம்ரான்கான். வேகமாகப் பந்து வீசியதால் மட்டுமின்றி ஸ்விங்கிலும் பிரேக்கிலும் காட்டிய மாறுபாடுகளாலும் இம்ரான்கான் நமது பாட்ஸ்மேன்களுக்கு எமனாக இருந்தார். இந்திய அணியின் மூன்று படுதோல்விகளுக்கு வழி வகுத்த அவருடைய பந்து வீச்சுக்கு நமது பாட்ஸ்மன்களிடம் பதிலே இல்லை. இந்த மூன்று மாட்ச்களில் அவர் முப்பது விக்கெட்களை வீழ்த்தினார் என்பதைப் பார்க்கையில், பாகிஸ்தான் வெற்றிகளில் இம்ரான் கானின் பங்கு எவ்வளவு என்பது எளிதில் புரியும். ஸர்ஃப்ராஸ் நவாஸ் அவருக்குப் பக்க பலமாக இருந்தார் எனினும் இந்திய அணியை இம்ரான் கான் தனி ஒருவராகவே வீழ்த்தி விட்டாரோ என்ற பிரமையே ஏற்படுகிறது!

இந்திய அணியின் பாட்டிங்கில் வெற்றிகரமாக ஆடியவர் மோகிந்தர் அமர்நாத் ஒருவரே. பஞ்சாப் சிங்கம் லாலா அமர்நாத்தின் புதல்வரான இவர், மூன்று செஞ்சுரிகள் அடித்ததுடன் இம்ரான்கானின் பந்து வீச்சுக்களையும் இலகுவாக ஆடி தமது தரத்தை நிரூபித்தார். கவாஸ்கர் ஒரு செஞ்சுரி அடித்ததுடன் அவ்வப்போது பிரகாசித்தார். ஆயினும் அவரது ஆற்றலையே வைத்து எடை போடுவோமானால் அவர் ஆட்டம் சோபிக்கவில்லை எனக் காண்கிறோம். விசுவநாத்தின் படுமோசமான ஆட்டம் பெரிய ஏமாற்றம். இந்திய அணிக்குக் கொடுமையான அடி. ஸ்ரீகாந்தும் அருண்லாலும் ஓப்பனிங் பாட்ஸ்மன்களாக சோபிக்காமல் போன பிறகு கடைசி டெஸ்டில் ரவி சாஸ்திரி ஓப்பனராக அழைக்கப்பட்டு ஒரு செஞ்சுரி போட்டதானது மற்ற இருவரையும் வெட்கத்தில் ஆழ்த்தி யிருக்க வேண்டும்.





✕ இம்ரான்கான்

செயல் வீரரான இம்ரான்கான் தலைமையில் பாகிஸ்தான் சாம்பியனாக விளையாடி வென்றது. இதற்கு நேர் மாறாக, கவாஸ்கர் தமது பாட்டிங் ஆற்றலே குறைந்துவிட்ட நிலையில் தமது அணியினரை ஊக்குவிக்க முடியாமல் திணறினார். அதிலும் கராச்சியில் இரண்டாவது டெஸ்டில் அடைந்த படுதோல்விக்குப் பிறகு அவரால் யாருக்கும் உற்சாகமூட்ட முடியவில்லை. ஆனாலும் அவரை மட்டுமே கூறிப் பயனுமில்லை. அவர் அணியில் பல பலவீனங்கள் இருந்தன. இந்தப் பலவீனங்கள் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு மேற்கிந்தியத் தீவுகளுக்குப் பயணப்படுகிற இந்திய அணியிலும் தொடர்கின்றன. இந்த அணிக்குத் தலைமை தாங்கி அங்கு செல்கிற கபில்தேவுக்கு மிகவும் சிரமமான பணி காத்திருக்கிறது. மற்றொரு பலம் மிக்க எதிரியைச் சந்திக்கப் போகும் கபில் தேவுக்காகப் பிரார்த்தனை செய்வோம். அவர் திரும்பி வரும்போது வசை அம்புகளைத் தாங்க நேராது என்று நம்புவோம்.

- தமிழாக்கம்: குட்டிகிருஷ்ணன்

## தற்கால இசையும் மலட்டுத்தன்மையும்



''தற்கால இசை அமைப்பாளர்களின் இசையில், ஒலி முரண்பாடுகள், விதிக்குப் புறம்பான கர வரிசைகள், சந்தங்கள், லயக் கூறுகள் முதலியன இருப்பதால் இந்த இசை நரம்பு மண்டலத்தைப் பாதித்து தலைவலி, மனச் சோர்வு, வாட்டம், நரம்புக் கோளாறு — ஏன் மலட்டுத் தன்மையைக் கூட உண்டாக்குகிறது! ஆனால் மரபு இசையை அல்லது சாஸ்திரிய இசையைக் கேட்பதால் எந்தக் கெடுதலும் வருவதில்லை'' என்கிறது ஸயன்ஸ் டைஜெஸ்ட்.

—எஸ். ஆனந்த்



● சோழவரத்தில்
ஒரு
சுயம்வரம்!

இளமை கொலுவிருக்கும்
இருபத்தாறு வயது
இளைஞர் திருவிழா

வாடாத புகழ்மாலையை
வைத்தபடி
புளகாங்கிதத்தோடு
காத்திருந்தாள்
பூமிப்பெண்!

● ஒரு மரபுக் கவிதையின்
வடிவ அழகோடு
வரிசையாய் நின்றவர்கள்

காலத்தின் பச்சைக்கொடி
காட்டப்பட்டதும்

புதுக் கவிதையின்
புலிப் பாய்ச்சல் மாதிரி
புறப்படுகிறார்கள்!



● வளைந்து கிடந்தது
பூமி வில்....
அலறிப் பாய்ந்தன
வாகன
அம்புகள்!

கொல்வதற்கு அல்ல
வெல்வதற்கு.

● வாகனங்கள் இசைத்த
மோகனங்களுக்கு ஏற்ப
பூமி
வளைந்தும் கொடுத்தது
நெளிந்தும் படுத்தது!

● தூரங்கள் மறைய
நிமிடங்கள் கரைய....
இலக்கு மட்டுமே
விழிகளில் தெரிய....

பாதைகள் அவர்களுடைய
பரீட்சைத் தாள்கள்.

பக்கங்களில்
வேகமாய் எழுதும்
பரீட்சை.

விரல்களால் அல்ல
வாகனங்களால்!

● வேகம்....வேகம்....வேகம்....
காற்றைக் கிழித்துக்
கலந்துவிடப் போவதுபோல்
வேகம்!

மு. மேத்தா

# பந்தயத் திடலும் சந்தனத் தமிழும் சிந்தனைச் சுழலும்

● **பார்வையாளர்கள்:**

கண்களின் திருவிழாவில்—
கால்கள்
அடித்த ஆணியாய்
அப்படியே இருக்க

இடையிடையே உடல்மட்டும்
எகிறிக் குதிக்க

ஓடும் வாகனங்களைத்
தொடர்ந்து
ஓடிக்கொண்டிருந்தன

உள்ளங்கள்!

● **மோட்டார் சைக்கிள் போட்டி:**

தோட்டாக் கிளம்பித்
துளைப்பதுபோல் பாய்கின்ற

மோட்டார் சைக்கிள்
போட்டா போட்டியில்

கடந்த ஆண்டின்
சாம்பியன் ஹக்ஸ்லி
கவனத்தைக் கவர்ந்தார்.

அந்தப் புயற்காற்று
அமர்ந்து சென்ற
பறவை அடிக்கடி
பழுதானதால்....

வெற்றி அவரை விட்டு
விலகியது.

ஜெர்மானிய வீரர்
ரோலந்துக்கு
ஜெயதேவி மாலையிட்டாள்.

ஜெயித்தவர் பக்கமே
சேர்ந்துகொள்கிற
சின்ன மனசுகளும்
டெரக்ஸ் ஹக்ஸ்லியின்

தோல்விக்குக்கூடத்
துதி பாடின.

காரணம்—
அந்த வீரனின்
வெள்விக்குக் கிடைத்த
தோல்வியல்ல
அது—
இயந்திரம் எழுப்பிய
கேள்வி!

●
இண்டியில் நடப்பதோ
உயிருள்ள குதிரைகள் மேல்
சூதாட்டம்...
இங்கேயோ
இயந்திரக் குதிரையுடன்
மனிதர்களின் போராட்டம்!

●
**பூவையர் போட்டி:**

தேரோட்டம் நடத்துகிற
தேவதைகள் — அங்கே
காரோட்டம் நடத்துகிற
காட்சி!

கரண்டி பிடிக்கும் கைகள்
கார் ஸ்டீயரிங் பிடித்ததனுல்...
புரண்டு படுத்திருந்த
பூமிக்குப் புன்சிரிப்பு!
மொய்த்த ரசிகவிழி
வண்டுகட்கோ சுறுசுறுப்பு!

பூவை மனசாக்கிப்
புன்னகையை முகமாக்கும்
கோவை நகரத்தார்
குலக்கொடி—
சீக்கிரம் பிடித்தது
ஜெயக்கொடி!

விஜயஸ்ரீயின்
சென்னை விஜயம்
வெற்றி விஜயமானது!

●
**ஆண்களின் கார் பந்தயம்:**

வெளிநாட்டுக் கார்களுக்கான
ஆடவர் போட்டியில்
சிறப்பாக முன்னேறிச்
சென்றுகொண்டிருந்த
சென்னை வீரர்
ஒரு
திருப்பத்தில் சற்றே
திகைக்க....

செல்லய்யா — கொஞ்சம்
நில்லய்யா — வெற்றி எனக்கு
இல்லையா? — என்று
கேட்டுக் கிளம்பி
போட்டியில் வென்ருர்
பம்பாயைச் சேர்ந்த
மல்லய்யா!

●
இங்கே
எத்தனை எத்தனை
திமுர்த் திருப்பங்கள்.....
தேர்தல் மாதிரி!

வட்டமிடும் சுற்றுக்களில்
நடக்கிறது
வாக்கு எண்ணிக்கை!

●
**விபத்தும் விளக்கமும்:**

விபத்துக்குப் பயந்தால்
வெற்றிபெற முடியுமா?

இவர்கள்
உயிரைப்
பணயம் வைத்துத்தான்
ஓட்டவருகிருர்கள்....

இங்கே
ஏற்படும் விபத்துக்கள்
இயற்கையானவை!

●
சமுதாய வீதியிலோ
ஆதாரமில்லாத
அவல வாழ்க்கையின்
சேதாரங்களெல்லாம்
செயற்கையானவை!

●
பந்தயத் திடல்களில்
எப்போதாவதுதான்
விபத்து
ஏற்படுகிறது.

இங்கேயோ — பலருக்கு
வாழ்க்கையே விபத்தாய்
வழங்கப்படுகிறது.

அதனுல்தான்—
எங்கள்
சந்தனத் தமிழ்கூடச்
செந்தணலாகிறது!

●
முதலில்—
வறுமையின்றி எல்லாரும்
வாழ வரம் கேட்போம்;
அப்புறம்
சோழவரம் பார்ப்போம்!

(மு. மேத்தா இப்புதுக்கவிதை எழுதத் தூண்டியவர்:
எஸ். சந்திரமௌலி

19–1–83 இரவு தெலுங்கில் செய்திகள் ஒலிபரப்பில் ''கும்பகோணம் ஜரிகிந்தி'' என்று கூறப்பட்டது. அதாவது குறிப்பிட்ட தொகுதி தேர்தல் பிரசாரத்தில் ஏதோ ஒரு தவறு நடந்தது—தில்லுமுல்லு நடந்தது என்ற குறிப்பை 'கும்பகோணம்' என்கிற சொல்லில் உபயோகித்திருக்கிருர்கள். ராஜாஜி முதன் மந்திரியாக இருந்த காலத்தில் அசெம்பிளியில் இப்படிப் பேசப்பட்டு அம்மாதிரி கூறக் கூடாது என்று சொல்லப்பட்டது ஆந்திரர்களுக்கு நினைவில்லையா?

—திருவிசலூர் விஸ்வா



கல்கி



1983 பிப்ரவரி 20
துந்துபி மாசி 8
மலர் : 41 இதழ் : 30



# ஏழுமணி நேர உண்ணாவிரதம்!

''நாலு சகோதரர்களும் என்னிடம் சேமிப்புச் செய்யுங்கள்; ஒரு சமயம் போதென்றால் அவரவர் தேவைக்கேற்ப அச்சேமிப்பி லிருந்து உதவுகிறேன்'' என்கிறார் தந்தை. அதில் ஒரு மகன் மட்டும் ''என் சம்பாத்தியம் எனக்கே போதவில்லை; சல்லிக்காசும் சேமிக்கமாட் டேன்'' என்று கூறிப் பணத்தை விரயம் செய்கிறான். பின்னால் அவ னுக்கே ஒரு கஷ்டம் வரும்போது, குடும்பச் சேமிப்பிலிருந்து தந்தை தனக்கு உதவியே ஆகவேண்டும் என்று அடம்பிடிக்கிறான். தந்தை கண்டிக்க மாட்டாரா? இதே அடிப்படையில்தான் தமிழக அரசும் இன்று கண்டனத்துக்குள்ளாகியிருக்கிறது.

சென்ற ஆண்டு பருவமழை பொய்த்ததால் விளைச்சல் சரியில்லையே தவிர அதற்கு முந்தைய பல ஆண்டுகளில் மத்திய உணவுசேமிப்புக்குத் தமி ழகம் ஒரு மணி நெல் கூட வழங்காததற்கு வலுவான காரணம் ஏதுமில்லை. இப்போது அம்பலமாகியுள்ள இந்த உண்மைக்குத் தமிழக அரசு பொறுப்




பேற்றேயாக வேண்டும். மேலும் தமிழக அரசு தன் கையிருப்பிலுள்ள அரிசியை விரயம் செய்திருப்பதாகவும் ஒரு குற்றச்சாட்டு. 1982-மே மாதம் 37000 டன் விநியோகிக்கப்பட்டதென்றால் இது மாதா மாதம் அதிகரித்து, டிசம்பரில் 92000 டன் கையிருப்பிலிருந்து கரைந்துள்ளது! தமிழகத்தில் வரட்சி காரணமாக அரிசி விலை உயராதிருக்கவும் சத் துணவுத் திட்டத்துக்காகவும் இந்த அரிசி பயன்படுத்தப்பட்டதாக அரசு விளக்கம் தரலாமென்றாலும் கிடங்குகளிலிருந்து நியாய விலைக் கடை களுக்கு மாதா மாதம் போகும் அரிசியின் அளவு ஆறே மாதங்களில் இரட்டிப்பாக வேண்டுமா என்ற கேள்வியும் எழுகிறது.

எனவே மத்திய அமைச்சர் தட்டிக் கேட்டதில் தவறேதுமிருப்ப தாகக் கருதுவதற்கில்லை. ஆனால் ''அவசரத்துக்கு இதோ அரிசி அனுப்பி விட்டேன்'' என்று தக்க ஏற்பாட்டைச் செய்துவிட்டுப் பிறகு அவர் கேள்விகளை எழுப்பியிருந்தால் நாகரிகமாக இருந்திருக்கும். மாறாக இன்று மத்திய – மாநில உறவுகள் மேலும் சீர்கெடவே ராவ் பீரேந்திர சிங் வழிவகுத்துள்ளார். மாற்றுக் கட்சி ஆளும் மாநிலத்தை மத்திய அரசு பகை அரசாகவே கருதுகிறது என்ற எண்ணத்துக்கு வலுவூட்டி யிருக்கிறார்.




பிரேந்திர சிங்கின் போக்கு அநாகரிகம் என்றால் தமிழக முதல்வரின் ஏழு மணி நேர ''உண்ணாவிரதம்'' கோமாளித்தனமாகி விட்டது. பத்திரிகைகளில் ஒரு நாள் பரபரப்புக்கும் ''விருந்துக்கு ஏழு மணி நேரம் பாக்கி'' போன்ற கிண்டல் தலைப்புகளுக்கும் கேலிப் பேச்சுக்கும் சிரிப்புக்கும் இடமளித்ததன்றி முதல்வரின் ''உண்ணாவிரதம்'' சாதித்தது ஏதொன்றுமில்லை. டெல்லிக்குப் போய் மத்திய உணவு அமைச்சருடன் பேச்சு வார்த்தை நடத்துவதை ''உண்ணாவிரத''மின்றியே அவர் நிறைவேற்றியிருக்க முடியும். உண்ணாவிரதம் மேற்கொள்கிற ஒரு தலைவருக்கு தெய்வ பக்தியுடன் ஆத்ம சுத்தியும் உள்நோக்கும் பார்வையும் தார்மீக பலமும் வேண்டும். இன்று தமிழகத்துக்கு மத்திய அரசு அரிசி தரவில்லையே என்று எம். ஜி. ஆர். ஏழு மணி நேர ''உண்ணாவிரதம்'' இருந்தால் நாளை மத்திய சேமிப்புக்கு தமிழகம் அரிசி தரவில்லையே என்பதற்காக மத்திய அமைச்சர் எட்டு மணி நேர ''உண்ணாவிரதம்'' தொடங்கலாம். இப்படியே போனால் ஆட்சி என்பது கேலிக்கூத்தாகிவிடும்.

முன்பு தி.மு.க. தலைவர் பாதயாத்திரையின் புனிதத்தைக் கெடுத்தார்; இன்று அ.தி.மு.க. தலைவர் உண்ணாவிரதத்தின் மகிமையை மாசுபடுத்தியுள்ளார்.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்.



## அத்தியாயம் 6

வரதன் வெகுதூரம் போய்விட்டிருந்தான். ராவுத்தர் லாரி அசையாமல் நின்றிருந்தது. இரவின் குளுமை லாரியின் மீது படிந்து பனித் துளிகளாய்ப் பூத்து கோடு கோடாய் வழியத் துவங்கியிருந்தது. முன் பக்கம் நொறுங்கி அடிபட்ட வேகம் ஆக்ஸில் ஷாப்டைத் தாக்கி பின்பக்க ஆக்ஸில் சிதிலம் அடைந்திருந்தது. ரேடியேட்டர் உருத் தெரியாமல் போயிற்று. வண்டியின் முன் சக்கரங்கள் இணைற்றுக்குள்ளும் பின் சக்கரங்கள் சிதிலமான சுவரில் முட்டியபடியும் இருந்தன. மேல் பலகையில் நஸீர் என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது. பிறை நிலவும் சுடரும் வரைந்திருந்தன. பின் பக்கம் இரண்டு கண்கள் வரைந்து, 'என் கண்களைப் பார். சிரி' என்று எழுதியிருந்தது.

விடிந்ததும் நிறையப் பேர் சிரித்தார்கள்.

''தண்ணி குடிக்கப் போயிடுச்சுடா லாரி. இடிச்சுச் சொருகியிருக்கறதைப் பாரேன்.''

''ஓட்னவன் தண்ணி போட்டிருப்பான். உனக்கு மட்டும்தானா தண்ணி, நானும் போட்டுக்கினு வரேன்னு இறங்கிடுச்சு.''

''ஆளு காணமே.''

''கெணத்துல வுழுந்துட்டானா?''

''மொதக்காது?''

''உடனயா, மொள்ள மொதக்கும்.''

''அதுவரைக்கும் என்ன செய்ய?''

''ரெட்டியாரு கெணறு தூரு எடுக்கனு மின்னு சொன்னாரு. லாரிக்காரனையே செவுரு கட்டித் தூரு எடுத்துறச் சொல்லலாம்.''

''நல்லா செய்வானே லாரிக்காரன்.''

''செய்யணுமய்யா. செய்யாட்டி லாரி எடுக்க வுட்டுருவமா. கழுத்துல துண்டு போட்டு துட்டு வாங்கமாட்டம். பொதுச் சொத்து நாசம்; வுட்ற முடியுமா?''

''எவன் சொத்தோ, மாட்டிக்கினு லோல் படப் போறான்.''

''லாரி வச்சுருக்கான்னு சாதாரண ஆளா. இருக்கப்பட்டவன்தான். குடுத்தா என்ன?''

''அடி வேற பலமா இருக்கு. லாரி தேறுமான்னே தெரியலே.''

''தேறுத என்ன, ரெண்டாப் பொளந்த வண்டியெல்லாம் பத்தவச்சு ஓட்றான்.''

''இன்ஷூரன்ஸ் குடுக்குமில்ல.''

''கட்டியிருந்தாக் குடுக்கும்.''

பாலகுமாரன்

# இரும்பு குதிரைகள்



ராவுத்தர் இன்ஷ்யூர் செய்திருந்தார். அது தேர்ட் பார்ட்டி இன்ஷ்யூரன்ஸ். எதிர் வண்டிகள், கால்நடைகள், மனிதர்கள், சிறகற்ற பறவைகள் ஸ்தாவர சங்கம சொத்துக்கள் அடிபட்டு நாசமானால் மட்டுமே ஓட்டுபவர், உதவியாளர் மட்டுமே இதில் பலன் பெற முடியும். வண்டிக்குச் சேதமெனில் கொடுக்கப்பட மாட்டாது.

''மேல என்ன ஓடு. ஆரு யாரும் தெம்படலை.''

''ஏறிப் பாரேன்.''

''கோதுமை போல இருக்குது. மக்கின வாசனை வருதே.''

''உருவிப் போடு பார்ப்பம்.''

''போதுமா?''

''இன்னும் உருவுடா. நம்ம ஊர்க் கெணத்தை நாசம் பண்ணலை. உருவு. நெறைய.''

''த்தே... சின்னப் பொண்ணு. ஊட்டுக்குப் போய் ரெண்டு கூடை கொண்டா.''

உருவினார்கள். யார் யாரோ ஏறி மூட்டைகளை உதைத்து நாசம் பண்ணி உருட்டி விட்டார்கள். கூடையில், முறத்தில், முந்தானையில், வேஷ்டியில் விரித்துப் பிடித்துக் கொண்டார்கள்.

வெயில் சூடேறுவதற்குள் பின் பக்க மூட்டைகள் திருடு போயின.

லாரி ஆள் பாரம் தாங்காமல் ஆடியது. ஒற்றைக் கல் தடுப்பில் ஒட்டிக்கொண்டு நின்றது.

எந்த தேசத்தில் ஓர் இளம்பெண் பூரண அலங்காரியாய் இரவு நேரம் பயமின்றி, ஆபத்தின்றி நடமாட முடிகிறதோ அதுவே சுபிட்சமான தேசம், அதுவே ராமராஜ்யம்.

இந்தத் தேசத்தில் சுபிட்சம் இல்லை. சகலரும் திருடர்கள். வாய்ப்புக் கிடைக்குமானால் அனைவரும் கொள்ளைக்காரர்கள். பிறன் மனை கவிப்பவர்கள். பிறர் பொருள் கவர்பவர்கள். ''கோரிக்கையற்றுக் கிடக்கு தண்ணே வேரில் பழுத்த பலா''. நெஞ்சில் ஈரத்தோடு . பாடிய பாடலுக்கு வேறு அர்த்தம் கற்பிப்பவர்கள். ''ஆள் இல்லாத சொத்து. ஆளுக்குப் பாதி எடுத்துக்குவம். கேட்டா எனக்குத் தெரியாதுன்னுடுவம்.''

''கெடந்துச்சு. பொறுக்கினேன். எவன் சொல்றது. கன்னம் வச்சமா, கதவு பேத்தமா? உருவுடா இன்னொரு மூட்டை'' பின் பாரம் குறைய லாரி மேலும் ஊற்றுக்குள் சரிந்தது.

விஸ்வநாதன் கார் அந்த இடத்தை வேகமாகக் கடந்தது. சட்டென்று விசு திரும்பினான்.



''கபூர் கொஞ்சம் நிறுத்து'' கார் நூறடி கடந்து நின்றது. வட்டமிட்டு விபத்து நடந்த இடத்துக்கு வந்தது.

ஜனங்கள் சிதறினார்கள். முடிந்து கொண்டார்கள். உதறினார்கள். உயரே ஏறியவன் குதித்துத் தெருவோடு ஓடினான். முன்னமே வந்து வாரிக் கொண்டவன் வெறுமே வேடிக்கைப் பார்ப்பது போல் வெகுளியாய் முகம் மாறினான்.

விஸ்வநாதன் லாரி நம்பரைப் பார்த்தான். இவன் தேடுகிற வண்டி இல்லை. எவனுடையதோ...எவன்சொத்தோ கொள்ளை போகத் துவங்கிவிட்டது. பாவம்!

''டிரைவர் எங்கய்யா?'' கூட்டத்தை நோக்கி அதட்டினான்.

''யாரும் தெம்படலிங்க. போலீஸுக்குப் போயிருக்கானோ என்னவோ?''

''மூட்டையப் பிரிச்சது யாரு?''

''ஜனங்கதான்.யார் கேக்கறது இவங்களை. எல்லாம் இவங்க ராஜ்யம்.''

பொறுப்பற்ற பொதுஜனம். தனி மனிதனாய் இருக்கிறபோது உண்டான பொறுப்பு, பயம் பொதுஜனமாய் கூடுகையில் சிதறி விடுகிறது.

''ஏங்க உங்களுதா லாரி?''

''என்ன அதுக்கு?''

''ரெட்டியார் கெணறு. சுத்தமா நாசமாயிடுச்சு. ஊருக்கு உபயோகப்படற எடம். நஞ்சை இடம். நஸ்டம் நெறைய.''

''நீ ரெட்டியாரா?''

''இல்லே.''

''பின்ன — போய்யா அன்னாண்ட.''

''த்தே. சின்னப் பொண்ணு. போய் ரெட்டியாரைக் கையோட இட்டா. இடிச்சதையும் இடிச்சப்புட்டு ரேங்கிக் காட்றீங்க. லாரி நவுராது... ஆமா....''

''முதல்ல இந்த எடத்த வுட்டு எவனும் நவுரக் கூடாது. மூட்டையைத் தொட்டவன் அத்தினி பேரும் நிக்கணும். கபூர் போய் போலீசைக் கூட்டியா.''

---

**''என்னங்க, மாப்பிள்ளை நாம பேசிண்டிருக்கும் போது அடிக்கடி வெளிலே போய்விட்டு வாராரே, புகையிலை போடுவாரோ?''**

**''அதெல்லாம் ஒண்ணுமில்லே. அவர் எம். எல். ஏ. இல்லையா. அதனால்தான் நம்ம பேச்சுப் பிடிக்காதபோது வெளி நடப்புச் செய்யறாரு!''** **-ச. சம்பத்குமார்**



கல்லெறிய ஒதுங்கும் நாய் மாதிரி ஜனக் கூட்டம் ஒதுங்கிற்று. எட்டி நின்று வேடிக்கை பார்த்தது.

லாரியின் பின் பக்கப் பலகையில் அப்துல் ரஹ்மான் ராவுத்தர் டிரான்ஸ்போர்ட். தண்ணித் தொட்டித் தெரு. சென்னை. போன் நம்பர் எழுதப்பட்டிருந்தது.

பெரியபாளையம் ரைஸ் மில்லிலிருந்து போன் செய்தான்.

ராவுத்தர் போனை எடுத்தார்.

தன் பெயரைச் சொன்னான். தன் உத்தியோகம், கம்பெனிப் பெயர் சொன்னான். விபத்து விவரம் தெரிவித்தான். தான் லாரி தேடுகிற விஷயம் சொல்லி மேற்கொண்டு பயணம்செய்யவேண்டியிருப்பதாய்தெரிவித்து போலீஸ் புகார் பற்றிக் கேட்டான். போலீஸுக்குத் தெரிவித்து காவல் போடும்படி ராவுத்தர் கேட்டுக் கொண்டார். ஆபத்து நேரத்தில் உதவிய தன்மைக்கு எல்லையற்ற பரம்பொருளும் பேரருளாளனும் இனியவனுமான ஆண்டவன் நாமத்தை உச்சரித்து நன்றி சொன்னார். விஸ்வநாதன் பெயரையும் போன் நம்பரையும் குறித்துக் கொண்டார். போலீஸ் ஸ்டேஷனில் காவல் சொல்லிய பிறகு மறுபடி கார் கிளம்பிற்று.

விபத்து இடத்தில் காரை மறித்துக் கொண்டார்கள்.

''என்ன நீபாட்டுக்குப் பூட்டா... கெணத்துச் சொவுருக்கு யார் பதில் சொல்றது?''

''நாம கோதுமை திருடனமாம். என்ன தெகிரியம் பாத்தியா?''

''திருடனவன் எந்த பேமானியோ?எங்களை வந்து மிரட்டினா வுட்ருவமா?''

விஸ்வநாதனுக்கு மாஸ் சைக்காலஜிஅத்துப்படி. அவன் கம்பெனியில் சொல்லிக் கொடுக்கப்பட்ட பால பாடம். எதற்கும் எந்த நேரமும் பதட்டப்படாமல் இருக்கச் சொல்லிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. குரல் உயர்த்தவும், குழைந்து பேசவும், திசை மாற்றவும் விசேஷமாய்ப் போதிக்கப் பட்டிருக்கிறது. பிரச்னைகளைச் சந்திக்கும்போது கூர்மையடையக் கற்றுக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

விஸ்வநாதன் தீவிரமாய் யோசிப்பது போல உட்கார்ந்திருந்தான். சட்டென்று நிமிர்ந்து. ''ஒனக்கு என்ன வேணும்? கோதுமைதானே. எடுத்துக்க போ.''

''யார் கேட்டா ஒன் கோதுமை. இடிச்சதுக்கு மொதல்ல பதில் சொல்லுய்யா.''

''போலீஸுக்குப் போய் எழுதிக் குடு.''

''போலீஸ் என்ன பெரிய போலீஸு. துட்டக்குடுத்து மடக்கிடுவ.பஞ்சாயத்துக்குவா.''

''ஒனக்குப் படிக்கத் தெரியுமா?'' விஸ்வநாதன் தன் பெயரிட்ட கார்டை எடுத்தான்.

''தந்திப் பேப்பர் படிப்பேன்.''

''படிச்சவன் கிட்டப் போய் இதக் குடு. இங்க வந்து பார்க்கச் சொல்லு.''

''பஞ்சாயத்தில பத்திரம் கையெழுத்துப் போடாத லாரி நவுராது.''

''லாரிய நீயே வச்சுக்க. திருடு போன மூட்டைக்கும் பஞ்சாயத்துப் பதில் சொல்லுமில்லே?''

''ரெட்டியாரு வண்ட்டாரு... ரெட்டியாரு வண்ட்டாரு.''



சென்னை நகர கல்கி மங்கையர் மலர் கோகுலம் விநியோகஸ்தரும் அப்பாசாமி ரியல் எஸ்டேட், மாம்பலம் ஸப்தகிரி புக்ஷாப் ஆகியவற்றின் உரிமையாளருமான ஸ்ரீ S. அப்பாசாமி அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி ரேவதிக்கும் ஸ்ரீ V. கிருஷ்ணன் அவர்களின் குமாரன் சிரஞ்சீவி விஸ்வநாத், B.Sc. B.E. க்கும் (Computer Programmer, Air India, Bombay) சென்னையில் ஆபட்ஸ்பரி கல்யாண மண்டபத்தில் 26-1-83 அன்று மிகச் சிறப்பாக விவாஹம் நடைபெற்றது. காலையில் முகூர்த்தத்திற்கும் மாலையில் நடந்த வரவேற்பிற்கும் ஏராளமான நண்பர்களும் நகரப் பிரமுகர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.



இந்தூர் கல்கி, மங்கையர் மலர், கோகுலம் பத்திரிகைகளின் ஏஜண்டு ஸ்ரீமதி மீனாக்ஷி & வி.எஸ். குமாரய்யர் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி தோரவுக்கும், பாலக்காடு நூரணி கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீ வெங்கடகிருஷ்ணய்யர் அவர்களது குமாரன் சிரஞ்சீவி N. V. விச்வநாதனுக்கும் சமீபத்தில் சுவாமி மலையில் விவாஹம் வெகு சிறப்பாக நடந்தேறியது. வாழ்க மணமக்கள்.



ஜனாதிபதி எனப் பெயர் இருப்பது போல் பிரதமர் என யாராவது பெயர் வைத்துள்ளனரா? எனக் கேட்டுள்ளார் கருங்கல் ஜார்ஜ் (கல்கி 30-1-83 இதழ்)

எங்கள் பி.எச்.ஈ.எல்.-லில் (திருச்சி) ''முதல் மந்திரி'' என்ற பெயரை உடையவர் ஒருவர் உள்ளார்!

—இரணியல் க. சொக்கலிங்கம்

---

வந்தவர் கலங்கிப் போயிருந்தார்.

''என்னுங்க இது. சுத்தமா இடிச்சுட்டிருக்குதே.''

''உள்ள வந்து உட்காருங்க.'' விஸ்வநாதன் நகர்ந்து இடம் கொடுத்தான். ''கௌத்துக்குச் சொந்தக்காரர் வந்தாச்சில்ல. அப்புறம் என்னய்யா கூட்டம். கபூர் வண்டி எடு.''

''நகருங்கய்யா..... பஞ்சாயத்துக்குப் போறுங்க போலிருக்குது.''

வண்டி சறுக்கென்று கிளம்பியது. வழி விட்டார்கள். ஊர் தாண்டிப் போய் நின்றது.

விஸ்வநாதன் தான் வண்டிச் சொந்தக்காரருக்குப்போன் செய்திருப்பதை, போலீஸ் புகாரைச் சொன்னான். தனக்கும் இந்த லாரிக்கும் சம்பந்தமில்லை யென்றான். வண்டியிலிருந்த மூட்டை களவு போகாமல் இருந்தால்தான் ரெட்டியார் பக்கம் நஷ்ட ஈடு சீக்கிரம் வரும் என்றான்.

ரெட்டியார் முகத்தைத் துடைத்துக் கொண்டு வண்டியை விட்டுக் கீழிறங்கிப் போனார்.

வண்டி மேலே நகர்ந்தது.

''நாம பாட்டுக்குப் போயிருக்கலாம். ஒரு மணி நேரம் வேஸ்ட். ஏன் சார் மாட்டிக்கினே?''

''காரணமாத்தான் கபூர். ஊர் குழந்தையை ஊட்டி வளர்த்தா தன் குழந்தை தானே வளரும். என்ன சொல்றே.''

''நம்ம குழந்தை எங்கயிருக்குதோ? எப்பப் பாக்கப்போறமோ?''

''பார்க்காத திரும்பறதில்லே. திரும்பக் கூடாது.''

''பார்த்துடலாம் சார். லாரின்னு ரோடு மேலேதானே போகணும். கடலா வானமா.. வழிலயே கண்டு புடிச்சிடலாம்.''

பயணம் நீண்டதாய் இருந்தது. வெயில் ஏற ஏறக் களைப்பு அதிகரித்தது. செக் போஸ்ட் செக் போஸ்ட்டாய் விசாரிக்க வேண்டியதாயிற்று. எல்லா செக் போஸ்ட்டிலும் புன்சிரிப்புடன் குட்மார்னிங் சொல்ல வேண்டியிருந்தது. ஏதோ ஒரு ஹோட்டலில் சாப்பிட்டார்கள். மர நிழலில் நின்று வெற்றிலை போட்டார்கள். புத்தூர் செக் போஸ்டில் ஓய்வெடுத்தார்கள். ''கொஞ்சம் தூங்கிறியா சார்?''

''வேணாம் கபூர்.''

''சித்தபடுத்துக்கசார். வெயிலாயிடுச்சே.''

''எதுக்குப்பா?''

''எனக்குக் கண்ணுசொருகுது சார். ஒட்டறதுக்குப் பயமா இருக்கு.''

''அடடே... படுத்துக்கப்பா.''

''சார் படுக்கலையா?''

''வேணாம் கபூர். நீ தூங்கு.''

''ஒரு மணி நேரம் சார். சாப்ட களைப்பு. அப்புறம் ராத்திரி பூரா ஓட்டலாம்.''

''தூங்குப்பா.''

கபூர் கதவைப் பிரித்துக் கால் நீட்டி முன் பக்க சீட்டில் சரிந்தான். தூங்கிப்போனான்.

விஸ்வநாதனால் தூங்க முடியவில்லை. களைப்பு கண்ணைக் குத்தியது. ஆனாலும் உறக்கம் வரவில்லை. பின் சீட்டில் கண்கள் மூடி உட்கார்ந்திருந்தான். குதிரை முகம் தெரிந்தது. கொட்டிலில் உள்ளே பின் வலக்காலைச் சற்று தூக்கியபடி அசையாது இருந்த குதிரை தெரிந்தது. வால் மட்டும் விசிறி விசிறி ஆடிற்று.

குதிரைகள் தூங்குவதில்லை—

ஏனைய உயிரகள் போல — மனசுக்குள் வரிகள் ஓடின.

விஸ்வநாதன் கண்களைத் திறந்தான். வலப் பக்க வயலை வெறித்துப் பார்த்தான். முன் பக்கம் எட்டிக் கால் நீட்டித் தூங்கும் கபூரைப் பார்த்தான்.

நிலம் பரவி கால்கள் நீட்டி
கன்னத்துப் பக்கம் அழுந்த
குதிரைகள் தூங்குவதில்லை
ஏனைய உயிர்கள் போல.
நிற்கையில் கண்கள் மூடி
களைப்பினைப் போக்கும் குதிரை.
தொட்டதும் விழித்துக் கொள்ளும்.
தொடுதலைப் புரிந்து கொள்ளும்.
தூங்குதல் பெரிய பாவம்,
தூங்கவாப் பிறந்தீர் இங்கு?
வாழ்வதோ சிறிது நாட்கள்
அதில் சாவினை நிகர்த்தத் தூக்கம்
புரிபவர் பெரியோர் அல்லர்
வாழ்பவர் தூங்க மாட்டார்.
குதிரைகள் கண்கள் மூடி
குறி விரைத்து நிற்கும் காட்சி
யோகத்தின் உச்சக் கட்டம்
நெற்றிக்குள் சந்திர பிம்பம் — இது
குதிரைகள் எனக்குச் சொன்ன
வேதத்தின் நான்காம் பாடம்.

அப்துல் ரஹ்மான் ராவுத்தர் விபத்து நடந்த இடத்துக்கு வந்திருக்கக் கூடும். இன்று ராத்திரி அவருக்கும் தூக்கம் இருக்காது. தாரிணி இப்போது தூங்கிக்கொண்டிருப்பாள். இதனாலேயே அவளுக்கு ராத் தூக்கம் வராது. மேலும் இன்று நான் எப்போது வீடு திரும்பப் போகிறேனோ? இது போதும் அவள் தூக்கம் குலைய. தாரிணிக்கும் ரைஸ்மில்லிலிருந்து போன் பண்ணியிருக்

கலாம். பாவம் தாரிணி. அவளை அதிகம் வதைக்கிறேனோ? தெரியவில்லை. எதிர்பார்ப் பின்றி இரு என்று எப்படிச் சொல்வது? சொல்லி எப்படி அவளுக்குப் புரிய வைப்பது? நானும் ஏதோ எதிர்பார்க்கிறேன். எதை எவரிடமிருந்து என்ன என்று தெரியாமல் தவிக்கிறேன். இது இன்றைய நிலைமை. போதவில்லை என்று மட்டும் தெரிகிறது. இன்னும் ஏதேதோ செய்ய ஆசை இருக்கிறது. என் இருப்பைப் பத்திரப்படுத்திக் கொள்ளுகிற மாதிரி பெரிசு பெரிசாய் ஏதும் செதுக்கி விட்டுப் போக ஏக்கம் வருகிறது.

உயரம் உயரமாய் கல் கோபுரமும், கோவிலும் கட்டிவிட்டுப் போன மனித குணம், அரச குணம் கூப்பூடல் புத்தி எனக்குள்ளும் இருக்கிறது. கோபுரம் செதுக்கின காரியம் மாதிரி தான் சினிமா எடுப்பதும். இது இன்றைக்குப் பெரிய காரியம். அசுரவேலை. பிரம்மாண்டம். தெளிவும் நாசூக்கும், வர்ண உணர்வும் மொழி வளமும் ரசனை மனசும் காசும் குழுவும் கையாளும் கம்பீரமும் நல்ல நேரமும் வேண்டும்.

காடு சூழ வாழ்ந்த மனிதனுக்குக் கட்டிடம் கலையாயிற்று. கட்டி சாதாரணமாக வாழும் இன்றைய மனிதனுக்குக் கனவு கலையாயிற்று. வாழ்வில் இல்லாத ரம்யத்தை சொருகிஇருப்பதாய்க் கனவு காண வைக்கிறது. நானும் கனவு காண்கிறேனோ. உள்ளே ஆசைகள் தீராது கனவில் தீர்க்கும் காரியம் தான் சினிமா ஆசையோ?

சேலை மூடும் இளஞ்
சோலை
மாலை போடும் மலர்மாலை
இருபது நிலவுகள்
நகமெங்கும் ஒளி விடும்

இந்தப் பாட்டுக்கு ஏன் மனசு இப்படி விடலையாய்த் துள்ளுகிறது. இது காமமா? பெண் சபலமா? இன்று திரைப்படம் அதிகமாக ஈர்ப்பதற்குக் காரணம் செக்ஸ்; மற்றகாரணங்கள், வசதிகள் பிற்பாடுதான்.

# ஒப்பந்தம்



ஒரு பெரிய ஒப்பந்தத்திலிருந்து மீள பல ஒப்பந்தங்களுக்குள் தன்னைச் சிக்கவைத்துக் கொள்கிறாள் ருக்மணி.
அவற்றிலிருந்து அவள் தன்னை எவ்வாறு விடுவித்துக் கொள்கிறாள் என்கிற கதையைத் திரையில் ஒழுங்காகச் சொல்லியுள்ளார் டைரக்டர் விஜய கணேஷ்.
அடக்கமான ருக்மணியாக இருந்து 'ரூபஸ்ரீ' என்னும் சினிமா நடிகையாக மாறும்வரை படிப்படியாகத் தனது நடிப்பாற்றலை உணர்த்தியிருக்கிறார் ஸ்ரீப்ரியா.
நாலு முரடர்கள் தன்னை மானபங்கப்படுத்த முயல்வதான காட்சியில் நடிக்கச் சொல்ல இவர் நிஜமாகவே அவர்களை உதைத்து ஓட ஓட விரட்டுவது வேடிக்கையான நிகழ்ச்சி.
ரிக்ஷாவாலாவாக வரும் அசோகன் மதராஸ் பாஷையில் பாவ்லா காட்டிப் பேசி சலசலக்க வைக்கிறார்.
பால்காரன் வேடம் ஸ்ரீகாந்துக்கு. கதாநாயகிக்கு நிபந்தனை விதிக்காத ஒரே நடிகர் இவர்தான்.
கடைசியில் இவரும் ஒப்பந்தம் செய்து கொள்கிறார். திருமண ஒப்பந்தம்.
ஓட்டல் சொந்தக்காரராக வரும் மறைந்த நடிகர் கருணிராஜன் தோன்றும் காட்சிகள் தியேட்டரையே அதிர வைக்கின்றன.
தங்கவேலு, எம். சரோஜா, கவுண்டமணி, புஷ்பமாலா, தேங்காய் சீனிவாசன், நரசிம்மன், எஸ். கே. ரங்கமணி, வி. கோபாலகிருஷ்ணன் — இப்படிப் பலர் படத்தில் நடித்திருந்தாலும் ஸ்ரீப்ரியாவின் பெயர் தெரியாத தாயாராக நடித்திருப்பவரின் முகம் மட்டும் மனத்தில் நிற்கிறது. அத்தனை உருக்கம்!
ஒரு டைரக்டருக்கு உண்டான கண்டிப்பும் கறாரும் ஜெமினி கணேசனின் நடிப்பில் உண்டு. தயாரிப்பாளராக வரும் அமுதாவும் இதில் சேர்த்தி.
அவரவர்கள் ஒப்பந்தப்படி பணம் வாங்க வந்தவர்களை உட்காரவைத்துக் கதாநாயகி தனது சோகக் கதையைச் சொல்லி முடித்துவிட்டுத் தலை நிமிரும் பொழுது ஒருவர்கூட அங்கே இருப்பதில்லை.
தியேட்டரில் நாம் இருக்கிறோம், கடைசிவரை!

# தூங்காத கண்ணின்று ஒன்று

● ஆரம்பக் காட்சிகளில் ஓடும் ரயிலைத் துரத்தித் துரத்திக் கல்லால் அடிக்கிறார் மோகன்.

— அப்படிப்பட்ட வெறுப்பு கதையைப் பார்க்கும்போதும் ஏற்படுகிறது.

● வேலை வெட்டி இல்லாத நாடக நடிகன் மோகன் — எதிர் வீட்டுக்காரிஅம்பிகா — பெற்றோர்களுக்குத் தெரியாமல் இவர்களது காதலை மலர விடுவதில் டைரக்டர் தன் கைவரிசையைக் காட்டியுள்ளார்.

— 'ஜோதி' படத்தில் நாடக நடிகளுக வந்து இதே அம்பிகாவை இதே மோகன் காதலிப்பது நினைவுக்கு வருகிறது.

● தன் பெண்ணைக்காதலிப்பதை விரும்பாத 'அப்பா' அவனிடம் 'பத்து ரூபாய்க்குச் சில்லறை இருக்கா?' எனக் கேட்க ஆரம்பித்து.... ''நாலு காசு சம்பாதிக்க வக்கில்லாத உனக்குக் காதல் ஒருகேடா?'' என்று நாசூக்காக இன்ஸல்ட் செய்யும் இடத்தில் நாகரிகம் தெரிகிறது.

—அந்த நாகரிகம் கதாநாயகி அம்பிகாவுக்குத் தெரியவில்லையே? 'கள்ளத் தாலி' கட்டச் சொல்லி வற்புறுத்திக் கட்டிக் கொள்கிறாரே! ('கண்ணோடு கண்' நாயகி கற்றுக் கொடுத்த நாகரிகமோ?)

● குழாயடியில் தன்னைப் பார்த்துச் சினிமாப் பாட்டுப் பாடிக் கொண்டே தண்ணீர் அடிக்கும் மோகன் மீதுள்ள கோபத்தை சிறுவன் முதுகில் துவைத்துக் காட்டும் அம்பிகாவுக்கும் காப்பியைச் சுவைத்துக் கொண்டே எதிர் ஜன்னலுடன் சரசமாடும் அம்பிகாவுக்கும் நடிப்பில் நல்ல நெளிசல் உண்டு.

— நெளியாதவர் அப்பா வி.கே. ராமசாமிதான்! படுசீரியஸ்!

● வரவர எஸ். வி. சேகர் நடிக்க வேண்டியதில்லை போலிருக்கிறது. பேசினாலே ரசிக்கிறார்கள்.

— மோகனுக்கு இப்படி ஒரு ஆண் ஜோடி இல்லையென்றால் அலுப்புத் தட்டிவிடும்.

● டைரக்டரைத் தேடி மோகன் ஸ்டுடியோவுக்குள் நுழைய, அங்கே இரண்டு பேர் டைரக்டர்சுந்தர்ராஜனை (நிஜமான டைரக்டர்) அடிக்க, அவரை இன்னார் எனப் புரிந்துகொள்ளாமல் ''யாருங்க அந்த டைரக்டர்?' என்று கேட்க, ''நான்தானுங்க அந்த டைரக்டர்'' என்கிற இடத்தில், 'கதை, திரைக் கதை, வசனம், டைரக்ஷன் ஆர். சுந்தர்ராஜன்' என்கிற டைட்டிலைப் போட்டுக் காட்டுகிறாரே அந்த இடம்....

— டைரக்ஷனில் நயமான காட்சி வரும்போது 'நான் தான் அந்த டைரக்டர்' என்று சொல்லிக் கொள்வதில் பெருமை உண்டு. இந்த இடமோ....?

● தலைப்பை உச்சரிப்பதில் உள்ள சிரமம் படத்தைப் பார்ப்பதிலும் உண்டு.

**- திரைஞானி**



பிடரிமுழுவதும் நரைத்த திரைப்பட வசனகர்த்தா பேட்டி ஞாபகம் வந்தது. நிஜம்தானோஅது. திருமணம் ஆன பின்னும் பெண் அந்த ரங்கம் தெரிந்த பின்னும் வருமோ இது.

''குதிரைகள் கண்கள்மூடி
குறி விரைத்து நிற்கும்
காட்சி
யோகத்தின் உச்சகட்டம்
நெற்றிக்குள் சந்திர
பிம்பம்.''

புணர்ச்சிக்குத் துணை இல்லாதபோது குதிரைகள் மனசுக்குள் புணர்வு கொள்ளுமாம். கண் மூடி நிற்குமாம். வெறு வெளியில் கால் தூக்கி கனைக்குமாம். என் மனசும் இப்படியோ? துணை இல்லாத குதிரையோ?கூடல் என்பதுபெண்ணோடு மட்டும்தானா. நாலு பேருடன் பேசவும், எழுதுவதும், தன் மனசை லட்சம் பேரிடம் வெளியிடுவதும், அவர்கள் அதை அறிந்து கொள்வதும்கூடக் கூடல் தான். நான் தவிப்பதுஇந்த வெளியிடுதலுக்கா? இந்த அமைதியின்மை, தவிப்பு, அலையல்இதுகுறித்துத்தானா? ச்சே.... நான் அதிகம் படித்திருக்கக் கூடாது. இந்தப் படிப்பால் நிம்மதியில்லை. குமாஸ்தாவுக்குப் படிப்பு. அப்பா படித்த அதே குமாஸ்தா படிப்பு. கூட்டல், கழித்தல், வகுத்தல், பெருக்கல், 'டியர் சார், வித் ரெஃபரன்ஸ் டு யுவர் லெட்டர்' இப்படியே முடிந்து விட்டது. இந்தப் படிப்பில் அற்பமாய் ஒரு நம்பிக்கை பிறக்கிறது. அந்த அற்ப நம்பிக்கையை இறுகப் பிடித்துத் தொங்க நேரிடுகிறது. இந்தத் தொங்கலே ஜீவிதமாகிறது.

வாழ்க்கையில் முன்னேற பயம் அவசியம். பயத்திற்குப் பாதுகாப்பற்ற தன்மை அவசியம். பாதுகாப்பற்ற தன்மைக்குச் சிதிலமான குடும்பம் வேண்டும்.

விஸ்வநாதன் குடும்பம் உறுதியாய் இருந்தது. அவனைச் சுற்றிப் பலவிதமான பாதுகாப்புகள் இருந்தன. அவனை முன்னேற ஒட்டாமல் செய்தன. (தொடரும்)



## கல்கி-பாரதி நூற்றாண்டுப் போட்டி-8

### சரியான விடை எழுதியவர் வரிசை தொடர்ச்சி :

201. என். மீனாட்சி, கல்லிடைக்குறிச்சி; 202. எஸ். ராமநாதன், சாத்தூர்; 203 இ. துர்க்காவதி, சேலையூர், சென்னை-73; 204. வி. ஆர். நாகராஜன், வளவனூர்; 205. ஆர். மீனாட்சிசுந்தரம், மதுரை; 206. கோ. செல்லக்கண்ணு, ஆலிவலம்; 207. எஸ். ரங்காயகி, மதுரை-3; 208. எஸ். வெங்கட்ராமன், சென்னை-40; 209 ஆர். மித்ரா, மயிலாடுதுறை; 210. ஏ. ஆர். சியாமளா, கும்பகோணம்; 211. நா. வி. ராகவன், பழுங்காநத்தம்; 212. ஜெ. சௌமிய நாராயணன், அயன்புரம், சென்னை-23; 213. மாது. பார்த்தசாரதி, சென்னை-5; 214. டி. சி. ஏகாம்பரம்; சென்னை-34, 215. வி. திருமாறன், மதுரை; 216. என். மீனாட்சி நடராஜன், மதுரை; 217. ஜெ. ரமேஷ், கிளனூர், சுக்காடு; 218. மா. மணிமேலை, பொள்ளாச்சி; 219. கலாவதி சந்திரசேகரன், திருவண்ணாமலை; 220. டி. மீனாம்பாள், திருப்பூர்; 221. ஜி. பார்த்தசாரதி, குண்டக்கல்; 222. கோ. கணேசன், திருச்சி; 223. வி. எஸ். சுந்தரி, திருச்சி-14; 224. டி. வி. நீலாராமன், மதுரை-14; 225. மு. மணிவேல், மதுரை; 226. செல்வி சாந்தி, கடலூர்; 227. கே. ரங்கராஜன், கோவை-11; 228. நா. ஹரி ஹரன், உப்பிலிபாளையம், கோவை; 229. ஏ. பாஸ்கரன், பெரணமல்லூர்; 230. இ. சத்தியமூர்த்தி, பெங்களூர்; 231. எஸ். ஆர். வித்யா, சென்னை-19; 232. வே. கலைச் செல்வி, சேலம்-8; 233. கே. ராஜாத்தி, சாத்தூர்; 234. ச. வேணுகோபாலன், திருப் பத்தூர்; 235. எஸ். சாவித்திரி, சாமராஜ் எஸ்டேட், நீலகிரி; 236. திருமதி வெங்கட் ராமன், சாந்தாகுரூஸ், பம்பாய். 237. ஜி. கண்ணன், சென்னை-5; 238. ஆர். ஜெய லட்சுமி, திருவொற்றியூர்; 239. எஸ். ரகு நாதன், மேலக்கோட்டையூர்; 240. சாரதா வெங்கடராமன், தஞ்சாவூர்; 241. சேலம் வைத்தீஸ்வரன், சேலம்; 242. ஜி. சித்ரா, காஞ்சிபுரம்; 243. முருகபாரதி பகவத்சிங், திருவண்ணாமலை; 244. ஹெலன் ஜூலியானா சங்ரி, கஞ்சிக்கோடு; 245. ஜி. அமுதா, மேசரலிங்கபுரம், நாகலாபுரம்; 246. வி. கல்யாணி, மதுரை-6; 247. ஆர். அன்பர சன், மதுரை-2; 248. பி. கே. பிரகதீஷ், மதுரை-9; 249. எஸ். வஸந்தா சீனிவாசன் தஞ்சாவூர்-7 250. எஸ். வி. பரமேசுவரன், சென்னை-4; 251. இரா. ஜான்சி ராணி, பழையபாளையம்; 252. ஆர். கருப்பண்ணன் நாமக்கல்; 253. ச. வெங்கடசாமி, ராம் நகர், கோயமுத்தூர்; 254. கே. மகேசுவரி, நல்லிபாளையம்; 255. மகாலட்சுமி, கூத்தப் பாக்கம்; 256. சந்திரசேகரன், கல்விக்குடி 257. எம். கவிதா, மதுரை; 258 விஜய லட்சுமி, கோயமுத்தூர்-14; 259. எம். செல்வம், ஹொசூர்; 260. விஜயவல்லி, கோவை; 261. கே. சிவசிதம்பரம், அஸ்தினா புரம்; 262. ம. அருணாசலம், மதுரை-10. 263. சி. வி. ராமசாமி, கோவை; 264; க. வீரமுத்து, ஆத்தூர், சேலம்; 265. கே. வாசுதேவன், ஆர். எஸ். புரம், கோவை; 266. டி. பழனியப்பன், பொம்மன்பட்டி; 267. ப. அமலோற்பவமேரி, போளூர்; 268. ஏ. இராஜேசுவரி, போளூர்; 269. சி. இ. முத்தம்மாள், சென்னை-6; 270. சந்திரவதனா, உடுமலைப்பேட்டை; 271. ஜி. பிரியா, புதுதில்லி; 272. எஸ். வி. கணேசன், நெய்வேலி; 273. ஜி. தீபா, புதுதில்லி-58; 274. எஸ். ராஜா, சென்னை-28; 275. டி. செல்வி, வத்திராயிருப்பு; 276. சிவகாமி, சென்னை-28; 277. ஆர். உஷா, சென்னை-34 278. கே. முனியம்மாள், நாமக்கல்; 279. ஸ்ரீமதி ராதா, திருச்சி-3; 280. ஜோ. கிறிஸ் டோபர் ராஜ்குமார், உதகமண்டலம்; 281. ஹேமலதா, சென்னை-1; 282. எஸ். பாஸ் கரன், சென்னை78; 283. ஜெயா பால சுப்பிரமணியம், சென்னை-24; 284. பி. சரவண பிரசாத், சென்னை-24; 285. வி. பாமினி தேவி, பெங்களூர் - 47; 286. எம். கிருஷ்ணவேணி, கிருஷ்ணகிரி; 287. கே. சுப்பிரமணி, பிரேஸர், டவுன், பெங்க ளூர்; 288. இராம கமலம், தெற்குப்பை; 289. கே. ஆர். வெங்கடேசன், திருவெறும் பூர்; 290. கே. இந்திரா, தஞ்சாவூர்; 291. எஸ். மஞ்களா, கும்பகோணம்; 292. டி. கே. சந்திர பிரபா, கோவை; 293. ரெ. உஷா, ஜயனூர் நகர், மதுரை; 294. ஜீ. புவனேசுவரி, அரங்கானூர், மேட்டூர்; 295. வி. விசுவநாதன், செங்கம்; 296. ஆர். செந்தில், தஞ்சை; 297. சிவ. கிருஷ்ணன், கணியூர்; 298. கே. எஸ். செல்வராஜ், கேயர்பெட்டா; 299. ஆர். வரதராஜன், ஈரோடு; 300. பி. சரோஜா, கணியூர்.

- இன்னும் வரும்



■ காற்றின் அழுத்த சக்திக்கும் பலூன் பரிசோதனை



# விளையாட்டாக விஞ்ஞானம்

எளியமுறையில் தான் தயாரித்த பொருள்கள் மூலம் விஞ்ஞானத்தை விளக்குகிறார், தியாகராய நகர் ராமகிருஷ்ணு பள்ளியில் ஆசிரியரான திரு பி. எல். கிருஷ்ணசாமி. எவ்வளவு வசதியற்ற எலிமெண்டரி பள்ளி என்றாலும் இவருடைய பாணியில் பொருள்களைத் தயாரித்து விஞ்ஞானம் கற்றுத்தர முடியும்.

ஆரியபட்டா என்று சொன்னால் போதுமா? அது எப்படி இருக்கும் என்று விளக்க வேண்டாமா? ஒரே அட்டையில் அதைத் தயாரித்து வைத்திருக்கிறார். இதில் 26 பட்டைகள் உள்ளன. மடித்தால் 18 சதுரமாகவும் 8 முக்கோணமாகவும் இருக்கும் என்பதைத் தெளிவாகக் குழந்தைகள் உணரும் வகையில் விளக்குகிறார்.

அணு என்றால் எப்படி விளக்குவது? பின்னக் காயைப் பயன்படுத்தி அணுக்களையும் மாலிகியூலையும் விளக்குகிறார். களிமண்ணிலும் உருண்டைகள் தயாரித்து விளக்கலாம்.

■ பி. எல். கிருஷ்ணஸ்வாமி






வளரும் தேயும் நிலா என அத்தனை பிறைகளையும் அழகாக அட்டையில் வெட்டிவைத்து விளக்குகிறார். தேய்பிறை, வளர் பிறையைக் குழந்தைகள் நன்கு அறிய முடியும். திரும்பி வரும் டிரம் என்ற ஒன்றை அறிமுகப்படுத்தியுள்ளார். அட்டையினால் செய்யப்பட்டு இரண்டு பக்கங்களும் மூடிய டிரம் இது. இதை உருட்டி விட்டால் திரும்பி வரும். இயங்கு சக்தி நிலைப்பு சக்தியாக மாறுகிறது என்பதை நிரூபிக்க இந்தத் திரும்பி வரும் டிரம்.

காற்றின் அழுத்த சக்தியை மாணவ மாணவிகளுக்கு விளக்கிக் காட்ட மிகவும் எளிய, சட்டென்று மனத்தில் பதியும் முறையொன்றும் வைத்திருக்கிறார். பெரிய பலூன் எடுத்துக் காற்று அடைத்து வைத்துவிட்டு அதன் மேல் ஒரு பலகையைப் போட்டு இருப்பதில் குண்டான மாணவனை ஏறி நிற்கச் சொல்கிறார். காற்றடித்த பலூன் வெடிப்பதில்லை. இது காற்றின் அழுத்த சக்திக்குச் சான்று. இந்த மாதிரி செய்து காட்டும்போது மாணவ மாணவிகள் விஞ்ஞான தத்துவத்தை எளிதில் புரிந்துகொள்கின்றனர்.

ஒரு பொருள் விசையால் தாக்கப்பட்டால் தான் நகரும் என்பதை விளக்க ஒரு டப்பாவின் மேல் ஓர் அட்டையை வைக்கிறார். அட்டையின் மேல் ஒரு நாணயத்தை வைக்கிறார். அட்டையை விசை தாக்கும்போது அந்த அட்டை மட்டும் பறந்து போகிறது. அதன் மேல் வைத்துள்ள நாணயம் டப்பாவில் வீழ்ந்து விடுகிறது.

ஒரு மேஜை விளக்கில் சுற்றி ஜன்னலைப் போல் ஓட்டை செய்த டோம் தயாரித்து மாட்டியிருக்கிறார். விளக்கு எரியும்பொழுது ஏற்படும் வெப்ப சலன ஓட்டத்தால் டோம் சுழல்கிறது.

இம்மாதிரி எளிய முறையில் விஞ்ஞானத்தை விளக்க 100 திட்டங்கள் வைத்திருக்கிறார் திரு கிருஷ்ணசுவாமி. இந்தத் திட்டங்களை ஆரம்ப பள்ளி ஆசிரிய ஆசிரியைகளுக்கும் கல்வித்துறையைச்சேர்ந்த பலருக்கும் விவரித்திருக்கிறார். ''சுமார் முப்பத்தைந்து வருடங்களாக இந்த முயற்சியில் ஈடுபட்டுள்ளேன்'' என்று குறிப்பிட்டார்.

காமன்வெல்த் அசோஷியேஷன், விஞ்ஞானம், கணக்கு இவற்றைச் சிறந்த முறையில் கற்றுக் கொடுக்கப் புதுமையான வழிகளை வரவேற்கிறது. இதற்கான போட்டியையும் வருடா வருடம் நடத்துகிறது. காஸ்மி அவார்டு எனக் கூறப்படும் இந்த விருது அண்மையில் திரு கிருஷ்ணசுவாமிக்குக் கிடைத்துள்ளது. மூன்றும் பரிசு. இதனைப் பெற்ற முதல் தென்னிந்தியர் இவர்தான்.

''இந்த விருதுக்காக 40 திட்டங்களைச் சுமார் 100 பக்கங்களுக்கு டைப் செய்து அனுப்பியிருந்தேன். தேவையான இடங்களில் புகைப்படங்களும் சேர்த்திருந்தேன். சில வரைபடங்களும் உண்டு. காமன்வெல்த் நாடுகள் அனைத்திலிருந்தும் பலரும் இதில் பங்கு பெற்றனர். கிட்டத்தட்ட மூவாயிரம் பேர் போட்டியில் கலந்து கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறேன்'' என்று கூறினார் பி. எஸ். கிருஷ்ணஸ்வாமி.

பேட்டி : **குயிலி ராஜேஸ்வரி**

# யோசனை

- சில காசுகளை மிச்சம் பிடிக்க பால் பாயிண்ட் ரீஃபில்களைத் தனித் தனியாக வாங்காமல், 'பாக்கெட்டாக' வாங்குகிறோம். ஆனால், இதனால் நமக்கு ஏற்படுவது நஷ்டமே. ஏனெனில் பாக்கெட்டில் உள்ள எல்லா ரீஃபில்களுமே நன்றாக எழுதுவதில்லை. எனவே இதை உதிரியாகத்தனித்தனியேநன்றாக எழுதுகிறதா எனக் கவனித்து வாங்குவதே நமக்கு லாபம்.

- அலுவலகத்துக்கு டிபன் மடித்துச் செல்ல நாளிதழ்களை வீணாக்க வேண்டாம். டிபனை இலையில் சுற்றி பால் கவரில் எடுத்துச் செல்லலாம். பால் கவர் பாலிதீனால் ஆனது. ஆகவே டிபனில் உள்ள எண்ணெய் வெளியே வழியாது. கைப் பைக்குள் வைத்து எடுத்துச் செல்வதும் சுலபம்.

- குழந்தைகள் அழும்போது தொப்புளின் மேல் பகுதியில் சிறிய பள்ளம் இருந்தால் குழந்தை பசியால் அழுகிறது என்று அர்த்தம். தொப்புளின் கீழ்ப்பகுதி சிறிது மேடாகத் தோன்றினால் அது மல ஜலம் கழிக்கத் தயாராகிக் கொண்டிருப்பதாகப் பொருள். ஒரு டாக்டர் கூறிய தகவல் இது.





- மாதத்தில் ஏழு நாட்களுக்கு மேல் மின் வண்டியில் சென்று வர வேண்டிய அவசியம் ஏற்படின் ஒரு மாதத்துக்கான சீஸன் டிக்கட் வாங்குவது நல்லது. உதாரணமாக, மாம்பலத்திலிருந்து கடற்கரை செல்லத் தனியாக டிக்கட் எடுத்தால் 90 காசுகள். போக வர ஒரு ரூபாய் எண்பது காசுகள். ஆனால் சீஸன் டிக்கட் பன்னிரண்டுரூபாய்தான்.

- சிறிதளவு எண்ணெயில் அப்பளம் பொரித்தாக வேண்டிய நிலை ஏற்பட்டால், அப்பளத்தை நான்காகக் கிழித்து எண்ணெயில் தனித் தனியாக இட்டுப் பொரிக்கவும். எண்ணெய் குறைவது காரணமாகப் பாதி பொரித்தும் பொரியாமலும் அப்பளம் ருசி குறைவதை இதனால் தவிர்த்து விடலாம்.

- 'ஸ்டவ்'வில் மண்ணெண்ணெய் ஊற்றியதால் கை நாறுகிறதா? ஒரு வெற்றிலையைக் கசக்கிக் கையைத் துடைத்தால் மண்ணெண்ணெய் நாற்றம் பறந்து விடும்.

- இஸ்திரிப் பெட்டியின் கறை ஆடையில் படிந்தால், சூடான இஸ்திரிப் பெட்டியை வாழை இலைத் துண்டுகள் மீது ஓரிரு முறை தேய்த்து விட்டு ஆடையைத் தேய்க்கவும். கறை பிடிக்காததோடு, இஸ்திரி செய்வதும் மிக எளிதாக இருக்கும்.

— **ஜெயஸ்ரீ**

# வீட்டுப்பாடம் செய்ய முடியாத அளவு களைப்பா?



# க்ளூகோன்-டி ®

உங்களுக்கு நம்பகமான
க்ளூகோஸ்-டியின்
புதிய பெயர்.

## அதிக சக்தி—அவனுக்குத் தேவையான போது.

புத்துணர்ச்சியூட்டும், குளுமையான, சக்தி தரும் க்ளூகோன்-டி. வைட்டமின்-டி, கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் ஆகியன செறிந்த அசல் க்ளூகோஸ் பவுடர் அடங்கியது. க்ளாக்ஸோ நிறுவனம் அளிக்கிறது. எந்த பானத்திலும் இதனை கலந்து அருந்தலாம். பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்தோ அல்லது நேரடியாகவோ உட்கொள்ளுங்கள். திரும்பவும் பெருகிவரும் சக்தியை உணர்வீர்.

க்ளூகோன்-டி உங்களுக்கு வழக்கமான அதே-பச்சை உறையிலே கிடைக்கிறது.




**க்ளூகோன்-டி** ® சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.
**க்ளாக்ஸோ** நிறுவனம் அளிக்கிறது.

HTB-CLL-7200-TL

மீனாட்சியம்மாள் முந்திய இரவு முழுவதும் கண்ணைக் கொட்டவில்லை. உள்ளத்தில் உறைந்திருந்த பரபரப்பின் விளைவாக என்ன முயன்றும் அவளால் தூங்க முடியவில்லை. இவ்வளவுக்கும் மறு நாள் எக்கச்சக்கமான வேலைகள் காத்திருந்தன. இருந்தும் முந்திய இரவு உறங்காத களைப்பு ஒருசிறிதுமின்றி அவள் உற்சாகத்துடன் எழுந்து தன் அலுவல்களில் சுறுசுறுப்பாக ஆழ்ந்தாள்.

'கலாகூடத்தான் தூங்கியிருக்க மாட்டாள்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள். இத்துடன் எத்தனை பேர் வந்து அவளைப்

''ஆவட்டும்மா!'' என்று இவள் பதில் சொல்லிவிட்டுக் காப்பியை வாங்கிக்கொண்டாள்.

பிற்பகல் மூன்றுமணி இருக்கும். அந்தப் பையனும் அவன் அக்காவும் வந்தார்கள். சமையலறையில் இருந்த அவளுக்கு அவள் அம்மா அவர்களை உபசரித்து நாற்காலிகளில் அமரச் செய்தது அரை குறையாகத் தெரிந்தது. இருவரும் நாற்காலிகளில் அமர்ந்ததும் கதவிடுக்கின் வழியாகப் பார்த்த அவளுக்கு அதிர்ச்சியாகத்தான் போய் விட்டது. நெஞ்சு

# மாதிரி மலர்கள்

## ஜோதிர்லதா கிரிஜா

பார்த்துப் போயாயிற்று! ஒன்றும் இசையவில்லை. எப்படியோ இட்ட முட்ட வரும் நேரத்தில் அவளைப் பார்த்துச் சம்மதித்தும் சென்றவர்களுக்கு அவளைப் பற்றிய ரகசியம் தெரிந்துபோய்த் திகைந்துவிடும்போல்தோன்றிய திருமணம் நின்றுபோய் விடுகிறது.

அடுக்களையில் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்த அம்மாவைப் பார்த்து கவா வருத்தமுற்றாள். தன் சொந்த வருத்தத்தைக் காட்டிலும் அம்மாவின் ஏமாற்றத்தைப் பற்றிய உணர்வு அவளை அதிகமாக வருத்தியது. தன் கடந்த காலம் பற்றிய விவரங்கள் தன்னைப் பெண் பார்க்க வருகிறவர்களுக்கெல்லாம் எப்படியோ தெரிந்து போய்விடுவதை எண்ணி அவள் வியப்படைந்து போனாள்.

ஒரு பெண்ணின் கடந்த காலத்தை உரசிப் பாக்காமல் அவளது நிகழ் காலத்துக்காக மட்டுமே அவளை ஏற்க முன்வருகிற பக்குவம் மனிதர்களுக்கு எப்போதுதான் வருமோ என்று அவள் நினைத்துப் பெருமூச்சுவிட்டாள். இன்று அவளைப் பார்க்க வர இருப்பவன் மாசிலாமணி என்ற இளைஞன். அவளுக்கும் சில ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு மாசிலாமணியைத் தெரிந்திருந்தது. கதைகளில் வருவது மாதிரி இந்த மாசிலாமணி அந்த 'மாசிலாமணி' யாகக் கூட இருக்கலாமோ என்ற எண்ணம் வந்து அதன் சாத்தியமின்மையை எண்ணித் தனக்குள் நகைத்துக் கொண்டாள். சென்னையில் லட்சக் கணக்கில் மாசிலாமணிகள் இருப்பார்கள். இவன் எந்த மாசிலாமணியோ?

''அடியே கலா! எப்பவும் கட்ற அந்த செகப்புப் பொடவை வாணம். அதுலதான் நல்லா இருக்குறே. ஆனாலும் அது ராசி இல்லே. அந்தப் பச்சைப் பொடவை இருக்குதே, அதக் கட்டிக்க'' என்றவாறு அவள் அம்மா அவள் எதிரில் வந்து நின்று காப்பியை நீட்டிக் கொண்டே அவளது சிந்தனையைத் தடுத்தாள்.



படபடவென்றது. 'இது நிகழ்ந்துவிடக் கூடும்' இவருடைய அக்காவுக்குத் தெரிந்து போய், அவள் ரகளை செய்தாலல்லாது மாசிலாமணி தன்னை நிராகரிக்க வாய்ப்பில்லை என்ற அனுமானத்தில் அவள் விரல் நுனிகள் முதற்கொண்டு ஆடின.

இருவருக்கும் முதலில் சிற்றுண்டி காப்பி வழங்கப்பட்டன. தனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியும் வியப்பும் மாசிலாமணிக்கும் ஏற்படும் என்பதை எண்ணி அவள் புன்னகை செய்து கொண்டாள்.

கூடத்துக்கு வந்து அவள்அவர்கள் முன்னால் நின்றபோது மாசிலாமணி வெளிப் படையாகவே நாற்காலியில் நெளிந்ததை அவள் கவனித்தாள். தனக்குத் தெரிந்தவன் என்பதால் அவன் அக்கா பக்கத்தில் இருந்ததை மறந்து சின்னதாக ஒரு புன்னகை கூடச் செய்து விட்டாள். ஆனால் மாசிலாமணியின் முகத்தில் சிரிப்பு ஏற்படவில்லை. அவன் கண்கள் மட்டுமே அகன்றிருந்தன. அதிர்ச்சியும் வியப்பும் மட்டுமே அந்தக் கண்களில் தெரிந்ததையும் அவற்றில் துளியும் மகிழ்ச்சி விளைந்திருக்கவில்லை என்பதையும் அவள் துல்லியமாகத் தெரிந்து கொண்டாள்.



அவள்அம்மா, அவள் அப்பா காலமானதிலிருந்து தானே அவளை வளர்த்து ஆளாக்கியது, எட்டாம் வகுப்பு வரையில் மட்டும் படிக்க வைக்க முடிந்தது, வீட்டின் ஒரு பகுதியை வாடகைக்கு விட்டிருப்பது ஆகியவற்றையெல்லாம் அவர்களுக்குச் சொன்னாள். தன்னிடம் பணம் அவ்வளவாக இல்லை என்ற பாட்டை வழக்கம் போல் பாடினாள். அவர்களின் கால்களில் விழாத குறையாகப் பேசினாள்.

அவன் அக்கா நெகிழ்ந்துபோன குரலில், கலா பேரழகியாக இருந்ததால் அழகை ஆராதிக்கும் தன்மையுள்ள தம்பிக்கு அவளைப் பிடித்தே இருக்க வேண்டும் என்ற நிச்சயத்துடன், ''என்ன தம்பி சொல்றே?....'' என்று வாய் விட்டுக் கேட்டு விட்டாள்.

''நாங்க போய்த் தெரிவிக்கிறோம்மா. அது தான் விலாசம் இருக்கே'' எறு மாசிலாமணி வெடுக்கென்று பதில் சொன்னதும் அவன் மனத்தில் என்ன இருந்தது என்பது தெற்றெனத் தெரிந்து விட்டதில் அவளுக்கு சப்பென்றுபோய்விட்டது. மனத்தில்சொல்லிமாளாத ஆத்திரம் மூண்டது.

அப்பா செத்துப் போய்க் குடும்பம் சொல்ல முடியாத வறுமையில் சிக்கிக் கொண்டபோது யாரோ தெரிந்தவர் வாயிலாக அவள் 'அந்த வேலை'க்குப் போகும்படி ஆயிற்று. 'அந்த வேலை' செய்த அலுவலகத்தில்தான் மாசிலாமணி பயிற்சி பெற்றுக் கொண்டிருந்தான். வேலையில் சேர்ந்த முதல் நாளே அவள் அவனை அறிமுகப்படுத்திக்-கொண்டாள். இன்னும் சொல்லப் போனால் அவன்தான் அவளைத் தேடி வந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். அவள் முகம் வெளிறி, வெட்கமும், வேதனையுமாக நின்றதைப் புரிந்து கொண்டு அக்கறையுடன் அனுதாபத்துடன் அவளுக்கு ஆறுதல் சொன்ன ஒரே ஆத்மா அவன்தான். மற்றவர்கள் எல்லோரும் வெறும் தொழில் முறை இயக்கம் கொண்டவர்களாக மட்டுமே இருந்த நிலையில் அவன் தனிப்பட்ட புரிந்து கொண்ட உணர்வுடன் தன்னை அணுகிப் பேசியதில் அவள் நெகிழ்ச்சியடைந்தாள்.

'அந்தத் தொழிலில்' தப்பே இல்லை என்றான். அங்கு வந்து பயிற்சி பெறுகிறவர்கள் எல்லாருமே கலைப் பார்வைமட்டுமே கொண்டவர்கள் என்று அடித்துப் பேசினான். யாருக்கும் வக்கிர புத்தியோ கோணல் எண்ணங்களோ இல்லை என்றான். கலைஞர்கள் வெறும் மனிதனின் வெறிப் பார்வை துளியும் இல்லாதவர்கள் என்றும், தங்கள் முன் நிற்பவள் ஒரு பெண் என்ற ஞாபகமே அவர்களுக்கு வராது என்றும் உறுதி சொன்னான். இப்படியெல்லாம் அவன் பேசப் பேச அவளுக்கு மனத்தெம்பு ஏற்பட்டது.

இவள் 'மாடல்' ஆகத் தொழில் செய்தது இவள் அம்மாவுக்கே தெரியாது. ஏதோ ஓவியப் பள்ளியில் சின்னச் சின்னக் கணக்கெழுதும் வேலை என்றுதான் பொய் சொல்லி முதலில் ஏமாற்றிக் கொண்டிருந்தாள். பிறகு

ஒரு நாள் அம்மாவுக்குத் தெரிய வந்துவிட்ட போது அவள்தான் எப்படித் துடிதுடித்துப் போனாள்! 'அடி பாவிப் பெண்ணே, என்ன தான் ஒரு வேளை சாப்பாட்டிற்கு மேல் சாப்பிட முடியவில்லை என்றாலும் அதற்காக இப்படியா ஒரு வேலை செய்வது?' என்று அழுதும், திட்டியும், அவளது வருங்காலம் பற்றி புலம்பியும் தீர்த்தாளே....

அவர்கள் போன பிறகு, ''என்னடி கலா! பையன் முகம் சரியாக இல்லையே? இதுவும் இல்லை என்றுதான் தோன்றுகிறது...'' என்று அம்மா அங்கலாய்த்தபோது அவள் ஒன்றும் சொல்லாமல் இருந்தாள்.

அம்மாவின் பிடுங்கல் பொறுக்க மாட்டாமல்தான் அவள் அந்த வேலையை விட்டாள். விட்ட சில நாட்களுக்கெல்லாம் நல்ல வேளையாக அவளுக்கு பொம்மை செய்யும் தொழிற்சாலை ஒன்றில் வேலை கிடைத்தது.

''மானேஜர் ஏன் இன்னிக்கு கல கலன்னு சிரிச்சுக்கிட்டே இருக்காரு?''
''இன்னைக்கு அவர் வீட்டிலேருந்து டிபன் கொண்டு வரலே, ஆபிஸ் கான்டீன்லே டிபன் சாப்பிடச் சொல்லி அவரோட மனைவி பர்மிஷன் குடுத்திட்டாளாம்.
—ச. கமல தியாகராஜன்



இவன் வெளியேறுவதற்கு முன்னாலேயே மாசிலாமணி தான் பெற்ற பயிற்சி போதுமென்று கருதி விலகிக் கொண்டு விட்டான். ஓவியக் கலையை அவன் ஒரு பக்கத் தொழிலாக மட்டுமே வைத்துக் கொள்ள எண்ணி இருப்பதாகவும் தனக்கு ஒரு நல்ல வேலை கிடைத்து விட்டதென்றும் அவனிடம் கூறி விடை பெற்றுச் சென்றான்.

நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இன்று அவனை அவன் சந்தித்தான். இவன் எந்த அலுவலகத்தில் வேலை செய்தான் என்பது தெரிந்திருந்தால் அவனைச் சந்தித்து தான் 'மாதிரி மங்கை'யாக வேலை செய்ததுதான் அவனது நிராகரிப்புக்குக் காரணமாயின், மனத்தில் தைக்கிற முறையில் சுடச் சுட நாலு கேள்விகள் கேட்டுவிட்டு வரவேண்டுமென்று முடிவு செய்து கொண்டாள்.

வரவேற்பாளர் சொல்லியனுப்பியதன் பேரில் மாடியிலிருந்து இறங்கி வந்த மாசிலாமணியின் முகத்து அதிர்ச்சி வெளிப்படையாகவே தெரிந்தது.

''வெளியே போய்ப் பேசலாமா?'' என்று அவன் மெதுவாகக் கேட்டான். அவள் தலையசைத்ததும் இருவரும் வெளியேவந்தார்கள். மவுனமாக நடந்து சற்றுத் தொலைவில் இருந்த பூங்காவை அடைந்து ஒரு பெஞ்சியின் மீது நிறைய இடம் விட்டு உட்கார்ந்தார்கள். உட்கார்ந்த பிறகும் சில நொடிகள் பேசாமையில் கழிந்தன. கடைசியில் கலாதான் அதைக் கலைக்கும்படி ஆயிற்று.

''உங்கள் முடிவு என்ன, மாசிலாமணி? எத்தனை வருஷங்களுக்கு அப்புறம் நிகழ்ந்த சந்திப்பு! நீங்கள் என்னைப் பெண் பார்க்க வருவீர்கள் என்று யார்தான் நினைத்திருக்க முடியும்?'' என்று அவள்தான் பேச்சைத் துவக்கினாள்.

'' 'ஐ'ம் சாரி, கலா! என்னால் உங்களை ஏற்க முடியாது!''
''காரணம் சொல்லுவீர்களா?''
''......''
''நீங்கள் போனதுமே எனக்கும் வேறு வேலை கிடைத்து விட்டது. நான் இப்போது மாடலாக இல்லை...''
''.....''
''என்ன ஒன்றுமே சொல்லாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்?''

''ஓவியப் பள்ளியில் நீ மாடலாக இருந்தது என்னுடன் பயின்ற மாணவர்கள் எல்லாருக்கும் தெரியும். அவர்களெல்லாம் திருமணத்துக்கு வருவார்களே? அழைக்காவிட்டாலும் கூட, எப்போதாவது நீதான் என் மனைவி என்பது தெரிய வந்தால் அசிங்கமாக இருக்குமே?'' என்று மெதுவாகத் தலை உயர்த்திப் பதில் சொன்னவன் அவள் தன்னைப் பார்த்துக் கொண்டிருந்த பார்வையின் கனலைத் தாங்கமாட்டாதவன் போன்று உடனே கண்களைத் தாழ்த்தினான்.

''உங்கள் சக மாணவர்கள் எல்லோரும் கலைப் பார்வை கொண்டவர்கள் என்று அன்று பேசினீர்களே!''

''வேறு என்ன கூறுவது? நான் கலைப் பார்வை கொண்டவன் என்பது உண்மை. ஆனால் மற்றவர்க்கெல்லாம் அந்தப் பார்வை இருந்திருக்கும் என்பது என்ன நிச்சயம்?''

அவள் கேலியும் ஆத்திரமும் மிக்க புன்னகையுடன் எழுந்து விட்டாள்.

''அப்படியானால் நீங்கள் மட்டும் யோக்கியன், மற்றவனெல்லாம் அயோக்கியன் என்று நினைக்கிறீர்கள்? அப்படி இல்லை. தரும புத்திரர் கண்களுக்கு எல்லாரும் நல்லவர்களாகவும், துரியோதனனுக்கு எல்லாரும் கெட்டவர்களாகவும் தெரிந்தார்களே, அந்தக் கதைதான் ஞாபகத்துக்கு வருகிறது. இதற்கு மேல் நான் உங்களை விமரிசிக்க வேண்டியதில்லை என்றே நினைக்கிறேன்!'' — இவ்வாறு வெடித்து விட்டு எழுந்த அவள் திரும்பிப் பாராமல் நடந்தாள்.











# பருகுக நரசுஸ் காபி
# பெறுக நற்பரிசுகளை!

- 12 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டபரா செட்.
- 6 கிலோ நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி டம்ளர்.
- 2 கிலோ நரசுஸ் காபிக்கு பல வண்ணத் துணிப் பை.
- 500 கிராம் நரசுஸ் காபிக்கு எவர்சில்வர் காபி ஸ்பூன்.

மொத்தமாகவோ, சில்லரையாகவோ வாங்கும் நரசுஸ் காபியுடன் கிடைக்கும் வெகுமதிக் கூப்பன்களைப் பெற்று வெகுமதிகளைப் பெறுங்கள்.

12.2.83 முதல் 19.3.83 வரை உள்ள விற்பனைக்கே வெகுமதிகள் உரியவை.

**ஜீவனுள்ள ஒரே காபி!**

## நரசுஸ்

**"தெர்மலோ" காபி!**



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE NCC 2261

4

நிலையத்தில் பஸ் நிற்பதற்குள் அங்கு இறங்க வேண்டியவர்கள் முண்டியடித்துக் கொண்டு இறங்கினார்கள். கடைசி ஆளின் இறங்கிய கால்கள் தரையில் பதியுமுன் தனது சுபாவ அவசரத்துடன் பஸ் கிளம்பிற்று.

கார்த்திக் தடுமாற்றத்துடன் 'வெலாஸிடி' யினால் எட்டடி நகர்ந்து பிறகு சமாளித்துக் கொண்டு கையிலிருந்து நழுவிக் கீழே விழுந்திருந்த புத்தகத்தைத் தூசி தட்டி கக்ஷத்தில் இடுக்கிக் கொண்டு ஒன்றுமே நடக்காதது போல் வீட்டை நோக்கி நடந்தான். பஸ் ஸ்டாண்டில் நின்றிருந்த நாலைந்து பேர்கள் அவனைப் பார்த்து லேசாகப் புன்னகைத்தார்கள். பஸ் டிரைவரின் ஓட்டத்திற்கான புன்னகை அது. 'அவன் அப்படித்தான் போவான். நாம்தான் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்கிற சமாதானப் புன்னகை.

அந்தப் புன்னகைகளின் பின்னால் இருந்த ஜடத்தன்மை லேசாக உறுத்திற்று. திடீரென்று விஜய்யின் வார்த்தைகள் நினைவுக்கு வந்தன. அவனது துக்கம் கண் முன்னால் நின்றது.

''நோபடி கேர்ஸ் 'யார்', நோபடி!''

யாருக்கும் யாரைப் பற்றியும் கவலையில்லை கரிசனமில்லை, அக்கறையில்லை. சாருண்யமில்லை. அகராதியின் பக்கத்தை மட்டுமே நிரப்பும் வார்த்தைகள் இவை. சில வருடங்களில் இதே விஜய் இவர்கள் மாதிரி கீழே எறியப்பட்ட பயணியைப் பார்த்து மேம்போக்காகப் புன்னகைப்பான். அல்லது அதுகூடச் செய்யத் தோன்றாமல் முகத்தைத் திருப்பிக் கொள்வான்....

கார்த்திக் தனக்குள் புன்னகைத்தபடி வேகமாக நடந்தான். மாலை தரிசனத்துக்காக பக்தர்கள் 'உத்தர சுவாமி மலை' ஏறிக் கொண்டிருந்தார்கள். அப்பாவும் கணேசனும் இப்பொழுது மும்முரமான அர்ச்சனை அபிஷேக பரவசத்தில் இருப்பார்கள். இரவு பத்து மணி வரை மலையின் படிகளுக்குக் கீழ் இருக்கும் உலகத்தைப் பற்றியும் அதில் புறப்படும் புதிய, பெரிய பிரச்னைகளைப் பற்றியும் தெரியாத அஞ்ஞானத்தில் இருப்பார்கள்.... எத்தனை பெரிய லாகிரி இது! ஜனரஞ்சகமான போதை இது!

லைசென்ஸுடன் சாப்பிடப்படும் அபின். அஞ்ஞானிகளுக்கேற்ற அபின்....

அவன் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டான். இந்த மார்க்ஸிஸமும் 'மாஸே துங்க'மும் தம்முள் எப்பொழுது நுழைந்தது என்று திடுக்கிட்டான். ஒரேஒரு விநாடி தாரா



வின் முகம் மனத்தைச் சலனப்படுத்த முயல அவன் அதைத் தன் 'சாத்வீக' பலத்தால் விரட்டியடித்து, அந்த எண்ணம் தோற்று வித்த புன்னகையுடன் வீட்டிற்குள் நுழைந்தான்.

அத்தை நடுக் கூடத்தில் கம்பளியை விரித்து அதன் மேல் உட்கார்ந்து பெயர் தெரியாத ஏதோ ஒரு டில்லி பூவைக் கோர்த்துக்கொண்டிருந்தாள். அவன் வருவதைக் கவனித்தபடியே ஊசியிலிருந்து நழுவிப் போன நூலைக் கோர்க்க முயன்று கொண்டிருந்ததைப் பார்த்து அவன் புன்னகையுடன் கேட்டான்.

''என்ன அத்தை, முப்பது வயசிலேயே உங்களுக்கு வெள்ளெழுத்தா?''

அத்தை சிரித்தாள்.

''எனக்கு முப்பதுன்னு உனக்கு வயசு நாலு!''

''இல்லையே! இருபத்திரண்டு! நாமட்டும் தான் வளர்ந்திருக்கேன். நீங்க முப்பது லேயே நின்னுட்டேள்!''

அவன் குளியலறைக்குச் சென்று இப்பொழுது பாய்லரில் ஜில்லிட்டுப் போயிருந்த நீரில் கால்களை அவசரமாகக் கழுவிக் கொண்டு கூடத்துக்குத் திரும்புகையில் அத்தையின் முகத்தில் ஒரு சோர்வு தெரிந்தது. ஓ, அசட்டுத்தனமாகப் பேசிவிட்டோம் என்று அவனுக்குள் உதைத்தது. முப்பதாவது வயதில்தான் அத்தை விதவையாகி வந்தாள்.

அவன் மௌனமாக விசாலத்தருகில் சென்று அமர்ந்தான். பூவை நோக்கித் தாழ்ந்திருந்த விழிகளில் நீர் பளபளத்தது என்கிற கற்பனையில் அவன் மெல்லிய குரலில்

''ஸாரி அத்தை!'' என்றான்.

சட்டென்று நிமிர்ந்த அத்தையின் பார்வையில் நீரும் இல்லை, கோபமும் இல்லை. குறும்பு தெரிந்தது.

''ஸாரின்னுப் போறுது. விஷயத்தைச் சொல்லு! இன்னிக்குக் காலேஜூம் இல்லே. எங்கே ஊர் சுத்திட்டு நிதானமா நுழைஞ்சு சாலாக்காப் பேசறே!''



அத்தை வேண்டுமென்றே 'ஸைட் ட்ராக்' அடிக்கிறான் என்று புரிந்தது. கூடவே வியப் பேற்பட்டது.

''உங்களுக்கெப்படி காலேஜ் இல்லேன்னு தெரியும்? ஓ, இயாரு சொன்னானா? சின்னப் பையன், ஒழுங்கா வீட்டுக்கு வந்திருப்பான்.''

''உன்னை விட ஒரு வயசு சின்னவன்!''

''இன்னிக்கென்ன பிறந்தநாள் ஆராய்ச்சி? வயசுக்குத் தகுந்த மாதிரி பசிக்கவும் செய் யும்னு தெரியுமோ? அதுவும் ஊர் சுத்திட்டு நிதானமா வர்ற தடியனுக்கு அதிகமாகவே பசிக்கும்னு தெரியுமோ?''

அத்தை பூச்சரத்தை வைத்துவிட்டு மரத் துப்போன கால்களை நீவிவிட்டபடி முகத்தின் புன்னகை மாறாமல் எழுந்தாள்.

''எல்லாம் தெரியும் வா. நீ வருவேன்னு கூடா வெச்சிருக்கேன்.''

காலையில் செய்யப்பட்டதாக இருந்தாலும் சர்க்கரைப் பொங்கலும் வடையும் இருந்த பசியில் அமிர்தமாக இருந்தன.

அம்மாவைக் காணோம். கோவிலுக்குப் போயிருப்பாள் என்று அனுமானித்தான்.

விசாலம் தொடுத்த பூச்சரத்தையும், தேங்காய் வெற்றிலை பாக்கையும் குடலையில் வைத்து சால்வையைப் போர்த்திக்கொண்டு

''நா கோவிலுக்குப் போறேன் வறியா?'' என்றாள்.

ஒரு விநாடி யோசித்து, ''வரேன்'' என்றான். ''வேஷ்டி கட்டிக்கணுமா?''

''இதப்பார். இந்தாத்து வழக்கங்கள் உனக்கு இருபத்திரண்டு வருஷமாத் தெரி யும். புதிசா நுழைஞ்சவனாட்டம் கேள்வி கேக்காதே!''

---

தலைவலி வந்தவுடன் ஒரு டம்ளர் ஸ்ட்ராங் காப்பியை எடுத்து அதில் பாதியளவு எலுமிச்சம் பழச் சாற்றைப் பிழிந்து சூட்டுடன் உடனே குடித்து விட வேண்டும். இந்தக் காப்பியைச் சாப்பிட்ட கால் மணி நேரத்தில் அது இரு பக்கத்துத் தலைவலியானாலும், ஒற் றைத் தலைவலியானாலும், தாங்க முடி யாத தலைவலியானாலும் குணமாகி விடும். இதை ஒரு முறை செய்து பார்த் தால் உண்மை விளங்கும். பிறகு எந்த மாத்திரையையும் தேட மாட்டார்கள்.

ஆதாரம்: எலுமிச்சை மரம்
என்ற நூலிலிருந்து
—ஏந்தல் ஆர். இளங்கோ





அவன் தனக்குள் முணு முணுத்தபடி வேஷ் டிக்கு மாறினான்.

''முருகன் வாயைத் திறந்து பேசினார்னு எனக்கும் பாண்ட் மாட்டிவிடு. வேஷ்டி குளிர்றதும்பார்!''

அத்தை பேசவே பேசாமல் 'கைத்தல நிறைகனி'யைச் சொல்லியபடி நடந்தாள்.

''நீங்க இப்பலேந்தே ஸ்தோத்திரம் சொல் லிண்டு போறது எப்படி இருக்கு தெரியுமா அத்தை? பரீட்சை ஹாலுக்கு நுழையறதுக்கு முன்னாடி புத்தகத்தைப் புரட்டற மாதிரி இருக்கு!''

அத்தை பேசாமல் ஸ்தோத்திரமாகப் புன் னகைத்தாள்.

'மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு....'

''இது என்னப்பூன்னு பிள்ளையார் முழிக் கப் போறார்!''

அத்தை பக்கென்று சிரித்தாள்.

மனசு சற்று லேசாயிற்று அவனுக்கு.

பிள்ளையார் சன்னிதியில் கணேசன் பளிச் சென்று படியில் நின்றிருந்தான். கையில் விபூதிக் கிண்ணத்துடன் — அதரங்களில் கார ணம் பாராத பர்மனெண்ட் புன்னகையுடன். அவனது சுருண்ட கட்டுக் குடுமி, அவன் தலைக்கு நேர் மேலாக இருந்த ''ஓம்'' நியான் சுருளின் வெளிச்சம் பட்டுப் பள பளத்தது. கழுத்தில் சின்ன ருத்திராட்ச மாலை. பிடிப்பான கருநீல முழுக்கை ஸ்வெட் டருக்கு மேல் சிவப்புத் துண்டு. நெற்றியில் விபூதிப் பட்டைக்கு நடுவில் குங்குமப் பொட்டு.

இவன் என் சகோதரன்! என் கூடப் பிறந்தவன்! இவனைப் பார்க்கும்போதெல் லாம் ஏற்படும் ஆச்சரியம் கார்த்திக்குக்கு இப்பவும் ஏற்பட்டது.

கணேசன் அவர்களைப் பார்த்து மிக லேசாகப் புன்னகைத்தான். விசாலத்திட மிருந்து குடலையை வாங்கிக் கொண்டு அர்ச்சனைத் தட்டைத் தொடச் சொல்லி 'பாரத்வாஜ கோத்ரே, விசாகா நட்சத்ரே, நாராயணஸ்வாமி சர்மணஹ....'

ஓ!

இன்றைக்கு அத்தையின் மறைந்துபோன கணவருக்குப் பிறந்த நாள்... அதுதான் அத்தை இன்று வழக்கமான உற்சாகமில்லா மல் இருக்கிறாள். சட்டென்று ஒரு கனிவு அவனுள் சுரந்தது. எப்படித்தான் உணர்ச்சி களைக் காண்பிக்கவே காண்பிக்காமல் இருக் கிறாள்! எல்லாரிடமும் ஒரே மாதிரி அன்பு காட்டிக் கொண்டு, யார் மனசும் நோகாமல் கரிசனமும் அக்கறையுமாய் வளைய வரு கிறாள்! அவனுடைய அப்பாவின் உலகத்துப் பிரதிநிதியாக இருக்கும் இவனுடன் அவனால் இன்று ஜோக் அடித்துக் கொண்டு பேச முடிகிறது என்றால் இவளது அன்பும் கரி சனமும்தான் காரணம்...

'நோபடி கேர்ஸ் 'யார்', நோபடி!'

விஜய்க்கு அத்தையைப் பற்றிச் சொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

சன்னிதியில் மூன்று நான்கு தமிழ்ப் பெண்கள் பாவாடை தாவணியில் நின்றிருந்தார்கள், தங்களுக்குள் ஹிந்தியில்



நிருபர்: உங்களுக்கு எத்தனை வயது?
நடிகை: பதினாறு வயது.
நிருபர்: உங்கம்மாவுக்கு எத்தனை வயது?
நடிகை: பதினாறு வயது.
நிருபர்: என்ன!
நடிகை: ஆமாம். எங்கம்மாவும் நடிகை தான்.

—எஸ். விஜயா சீனிவாசன்

---

குசுகுசுத்தபடி. மதராஸி ஸ்கூலில் ப்ளஸ் டு படிக்கும் மாணவிகளாக இருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். அவனுக்குச் சிரிப்பு வந்தது. உடையும் முகமும் படிய வாரிய நீளப் பின்னலும் அப்பட்டமான தமிழ்நாட்டைப்பறைசாற்றினாலும்,இவர்கள் தமிழை விட ஹிந்தியைத்தான் சுத்தமாகப் பேசுவார்கள். இப்பொழுது பிள்ளையாரிடம் வரப்போகும் பரீட்சைக்காக வேண்டிக்கொள்வது கூட ஹிந்தியில்தான் இருக்கவேண்டும். டில்லிவாழ் தமிழர்கள் எத்தனை பெரிய ஒரு இயல்பான கலாசார மாறுதலில் நகர்ந்து கொண்டிருக்கிறார்கள்!...எ கம்ப்ளீட் மெட்டமார்ஃபாஸிஸ்! வேர்களைப் பிடிவாதமாகப் பிடித்துக் கொண்டிருக்கும் மடிசார்களிலிருந்து மார்க்ஸிஸம் பேசும் ஜீன்ஸ் வரை! ஞாபகங்களிலேயே வாழும் சுப்புஸ்வாமியிலிருந்து கனவுகளை மட்டும் காண விரும்பும் பழைய சரித்திரமில்லாத தாராவரை....!

கார்த்திக் திடுக்கிட்டுத் தன்னை நிலைப்படுத்திக் கொண்டான். 'அவளுடைய நினைவு ஏன் திரும்பத் திரும்ப வண்டாய்க் குடைகிறது? 'மதராஸி' என்ற சொல்லின் ஆகர்ஷிப்பா'

தீபாராதனைத் தட்டை ஏந்தியபடி கணேசன் வந்தான், மென்மையான புன்சிரிப்புடன். தாவணிகளின் முன் நின்று தாண்டும் போதும் கொஞ்சம் கூட முகபாவம் மாறாமல் பார்வை நிமிராமல் அவன் செல்வதைப் பார்க்கப் பார்க்க ஆச்சரியமேற்பட்டது.

இந்த மெட்டமார்ஃபாஸிஸில் ஒட்டாத அதிசயப் பிறவி இவன். எந்த அலையிலும் அகப்பட்டுக்கொள்ளாத தபஸ்வி... அப்பா பிடிவாதமாகத் தன்னைச் சுற்றிப் பார்க்காமல் இருக்கிறார். இவன் பார்த்தும் பட்டுக் கொள்ளாமல் இருக்கிறான்....

''என்னடா யோசனை?'' என்று அத்தை அதட்டினாள். ''சீக்கிரமா மேலே ஏறி முருகனைப் பார்த்துட்டு வந்துடலாம் வா!''

''நோ அப்ஜெக்ஷன்!'' என்றான் அவன் நாடக பாணியில். ''எனக்கு இந்தத் தெய்வத்தை விட அங்கே அடைகாக்கிற பூஜாரிகளைக் கண்டாத்தான் பயம்!''

விசாலம் செல்லமாக அவன் காதைத் திருகினாள்.

''மடியிலே ஏதாவது கனத்தை வெச்சிண்டிருப்பே!''

அவன் பதில் ஏதும் பேசாமல் தன்னைச் சுற்றிலும் பார்த்தபடி ஏறினான். எத்தனை வடக்கத்திக்காரர்கள் முருகனைத் தரிசிக்க! மூக்காடிட்ட பெண்களும், பைஜாமா, குர்த்தா சால்வை ஆண்களும்... எந்தத் 'தெரப்பி'யை எதிர் நோக்கிப் போகிறார்கள்?

சின்னப் பெண்ணின் வாகவத்தோடு அத்தை படியேறினாள். மடிசார் கொசுவம் லேசாக விலகி பின்னங்கால்களின் வெள்ளை மழமழப்புத் தெரிந்தது. மறுபடியும் அவனுள் இனம்புரியாத கனிவு பொங்கியது.

சன்னிதியில் பெரிய ராக ஆலாபனைக்கு நடுவில் அப்பா அஷ்டோத்திரம் சொல்லிக் கொண்டிருந்தார். தன் சங்கீதத்தைத் தானே ரசிப்பவர் போல், நிதானமாக, விஸ்தாரமாக, சஞ்சரித்துக் கொண்டிருந்தார். பொறுமையற்ற டில்லியைப் பற்றிய பிரக்ஞை இல்லாமல். அவன் கூட்டத்தில் தன்னை நன்றாக மறைத்துக் கொண்டான். அப்பா பார்த்துவிடக் கூடாது என்று வேண்டுமென்றே தலையைக் குனிந்துகொண்டான்.

'தனியாகவா வந்திருக்கே?' என்று அப்பா அத்தையைக் கேட்பதும், 'இல்லையே, கார்த்திக்கும் வந்திருக்கான்' என்று அத்தை சொல்வதும் காதில் பட்டது. வீட்டிற்குத் திரும்பும் வழி நெடுக விசாலம் எதுவும் சொல்லாமல் ஏதோ ஸ்தோத்திரம் சொல்லும் பாவனையில் இருந்தாள். வீட்டை நெருங்குகிற சமயத்தில் ''இந்த வீட்டிலே பிறந்திருக்கிறது ஒரு அவமானப்பட வேண்டிய விஷயம்னு நீ நினைக்கக் கூடாது கார்த்திக்!'' என்றாள் மெல்லிய குரலில்.

அவன் லேசாகத் திடுக்கிட்டு அதைக் காண்பிக்காமல் சிரித்தான்.

'' 'அவமானம்' என்கிறது ரொம்ப ஸ்ட்ராங் வார்த்தை அத்தை! நா அப்படி நினைக்கல்லே!''

வீட்டிற்குள் அம்மா யாருக்கோ காப்பி கொடுத்து உபசரித்துக் கொண்டிருந்தாள். அவர்களைக்கண்டதும் உற்சாகமாக அறிமுகப் படுத்தினாள்.

''இவருடைய தம்பி திருவிடைமருதூர் கோயில்லே அர்ச்சகராம். அவருடைய பெண் ஜாதகத்தைக் கொண்டு வந்திருக்கார் கணேசனுக்காக....''

திடீரென்று ஆட்கொண்ட சோர்வுடன் அவன் பாடப் புத்தகங்களைப் பிரித்தான்.

திருவிடைமருதூரிலிருந்து வரும் பெண்ணிற்குத்தான் இந்த வீடு எந்த அதிர்ச்சியையும் அளிக்காது என்று தோன்றுகையில் அந்த கணேசனை ஒரு உலுக்கு உலுக்கினால் என்ன என்று ஆத்திரம் ஏற்பட்டது. (தொடரும்)

**கா**ன விஹார் சபாக் கூட்டம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. சீஸன் கச்சேரி. சங்கீத உலகத்தைத் தற்போது கான மழையால் நிரப்பி வெற்றி வாகை சூடிக் கொண்டிருந்த பிரபல பாடகரின் கச்சேரி. சின்னதாக தோடியின் ரசத்தை ரசிகர்களுக்கு ஆலாபனையாகப் பிழிந்து கொடுத்து விட்டு தோடி வர்ணத்தை அழகாகத் தொடங்கினார் வித்வான். பக்க வாத்தியங்கள் பக்க பலமாகச் செயல் பட்டன.

அந்த மதுரமான சமயத்தில் ''ஆயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பத்திரண்டுன்னு ஞாபகம். அப்போது உன் வயசுதான் எனக்கிருக்கும். இதே மாதிரி சீஸன் கச்சேரி. அப்போது எங்கள் ஊரிலேயும் உண்டு. நான்தான் காரியதரிசி. செக்கச் செவேலென்று இரண்டு காரட் கடுக்கன் காதிலே டால் அடிக்க, சான் அகலச் சரிகை அங்கவஸ்திரம் பளபளக்க, மயில் கண் ஜரிகை வேஷ்டியும் அதுவுமாக சபையிலே விகவநாதய்யர் உட்கார்ந்தவுடனேயே சபை நிறைஞ்சு போச்சு. பக்க வாத்தியங்கள் கும்பகோணம் பிள்ளைவாளும், பாலக்காட்டு மணியும்தான். கேட்பானேன்!'' என்று பக்கத்தில் இருந்தவர் ஐம்பது வருஷங்களுக்கு முன்னாலே போய் கொஞ்சம் மூச்சு விட்டு நிறுத்தினார். கச்சேரி கேட்க விடாமல் தொண தொணத்தது கஷ்டமாக இருந்தாலும், அவர் பேச்சின் சுவாரசியம் திரும்பிப் பார்க்கத் தோன்றியது. எங்கோ பார்த்து, ஏன், ரொம்ப வருஷங்கள் பழகிய முகம். ஆனால் ரொம்ப வித்தியாசம் தெரிகிறதே!

பக்கத்திலிருந்த கணவரிடம் மெதுவாக ''இந்தாங்களேன் ஒரு நிமிஷம்!'' என்று கூப்பிட்டேன் மிக மெதுவாக.

''பாட்டைக் கேளேன். எங்கோ பார்த்துக் கொண்டு எதையோ நினைத்துக்கொண்டு'' என்று ரகசியக் குரலில் என் கணவர் என்னைக் கடிந்து கொண்டார்

இதுதான் சமயம் என்று, ''இதோ, பாருங்கள்! என் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறாரே அவரை நான் எங்கேயோ பார்த்துப் பழகினது மாதிரி இருக்கு. எங்கப்பா வேலூரிலே இருக்கும்போது கிட்டு மாமானு பக்கத்து வீட்டிலே இருந்தார். அவர் சாயல் இவர்கிட்ட ரொம்ப இருக்கு. யாரைக் கேட்டு எப்படித் தெரிஞ்சுக்கிறதுன்னு புரியலே!'' என்றேன் மிக ரகசியமாக.

''ஒன்று செய்; அவரையே கேட்டு உன் சந்தேகத்தைத் தெளிவு படுத்திக்கோ!'' என்று படபடவென்று பொரிந்தார்.

''நான் பொம்மனாட்டி! எப்படி அவரைப் போய்க் கேட்பேன்!'' என்று மெதுவாகச் சிணுங்கினேன். ''நீயா?'' என்று ஆச்சரியத்துடன் என்னைப் பார்த்தார். நவரசமும் அந்தப் பார்வையில் மாறி மாறி வந்தது. எனக்கும் கோபமும் ரோஷமும் வந்தது. ''நீங்கள் கச்சேரியை மிஸ் பண்ணுகிறீர்கள். நான் என்னோட பிரச்னையை நானே தீர்த்துக்கறேன்!'' என்று சற்றுக் கோபத்துடன் கூறிவிட்டு இடப் பக்கம் திரும்பிக் கொண்டேன்.

பின் மண்டையில் பொறி தெறித்த மாதிரி வந்தன சில இனிய பழைய நினைவுகள்.

வேலூரில் ராமகிருஷ்ணபுரம். மூன்று வயது ஜானகி, அப்பா ஆபீஸிலிருந்து வருவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். சைக்கிள் மணி ஓசை. எத்தனை சைக்கிள் மணி ஓசையைக் கேட்டாலும் மூன்று வயது குட்டிப் பெண் அப்பாவின் சைக்கிள் மணி ஓசையை நன்றாகப் புரிந்துகொள்வாள். அப்பா அப்பா என்று தளிர் நடையுடன் வாசற்படி இறங்கி ஓடி வருகிறாள். அப்பாவும் கிட்டு மாமாவும் சேர்ந்த மாதிரி சைக்கிளில் வந்து இறங்குகிறார்கள். நடுவில் ஜானு புகுந்து வீல் என்று கத்த குழந்தைக்கு ஏதோ ஆகிவிட்டதென்று அம்மா கூக்குரல் போட, இரு ஆண்களும் கதறிக் குழந்தையை எடுக்க அவள் கையில் ஒட்டிக் கொண்டிருந்த மண்ணை உதறிவிட்டு, ''அப்பா!'' என்று கட்டிக் கொள்ள, கிட்டு மாமா ''போக்கிரிக் குட்டி'' என்று செல்லமாகச் சொல்லிப் பெருமூச்சு விட, இப்போ நடந்த மாதிரி இருக்கிறது.

அந்த ஜானகி வளர்ந்து பெரியவளாகி வரன் மேல் வரன் பார்க்க, எதைத் தேர்ந்தெடுப்பது என்று எல்லாரும் விழித்துக் கொண்டிருக்கையில் அவள் தைரியமாக இதே கிட்டு மாமாவிடம் போய், ''மாமா! நீங்கள்தான் அந்தத் திருநெல்வேலி வரன் தேவலை என்கிறதை அப்பா கிட்டே சொல்ல மாட்டேளா!'' என்று ரகசியமாக நாணத்துடன் சொல்லிவிட்டு ஓடி வந்தது பசுமையாக இருக்கிறது. ''அடி போக்கிரி ஜானுக்குட்டி'' என்று சந்தோஷத்துடன் தான் சொன்ன மாதிரி நண்பரிடம் சொல்லி ஜானு இஷ்டப்பட்ட வரனையே முடித்துக் கொடுத்தது இன்று நடந்தது போல் இருக்கிறது.



ஒவ்வொரு பிரசவத்துக்கும் கிட்டு மாமா அப்பாவுக்குச் சரியாக டர்ன் போட்டுக் கொண்டு சாப்பாடும், காப்பியும் கொண்டு வருவதும், மாமியும் அம்மாவும் ராத்திரி பூரா அழும் குழந்தையை மாற்றி மாற்றி வைத்துக் கொண்டு கண் விழித்ததும் மறக்கக் கூடியதா?

ஜானுவின் கணவருக்குப் பெரிய வேலை யாகி வடக்கே போன பிறகு கொஞ்சம் விட்டுப் போயிருந்தது. ஆனால் நினைவு என்றும் பசுமையாகத்தான் இருந்தது.

ஜானுவின் மூத்த பெண்ணுக்குக் கல் யாணம். அப்பா அம்மாவுக்கு முன்னால் கிட்டு மாமாவும் மாமியும் வந்து விட்டார்கள். ''நம்ம ஜானு பெரிய மனுஷியாகி மாப் பிள்ளையும் வந்துவிட்டாரே!'' என்று அப்பா விடம் பூரித்துப் போனது இன்று போல் இருக்கிறது.

அதன் பிறகு இன்னும் இருபது வரு டங்கள் கழிந்து விட்டன. பேத்தி கல் யாணத்துக்குத் தயாராக இருக்கிறாள். பிள்ளைகள் பெரியவர்களாகிக் குடும்பமும் பெரிதாகி விட்டது. சின்னப் பெண்ணுக்கும் கல்யாணம் ஆகிக் குழந்தைகளுடன் இருக் கிறாள். இவரும் ஓய்வு பெற்றுச் சென்னை யில் நிரந்தரமாகக் குடியேறிவிட்டோம். அப்பா, அம்மா காலமெல்லாம் அடுத்தடுத்து ஆகிவிட்டது. எனக்குப் பெரிய இழப்பு.

இன்றைக்கு இவரைப் பார்க்கும்பொழுது கிட்டு மாமாவைப் பற்றி மட்டும் என் இந்த நினைவெல்லாம் வரவேண்டும்? இவர்தான் அவராக இருப்பாரோ? கிட்டு மாமா இப்ப டிப் பழுத்து, கால் வீங்கி, தலை நரைத்து, வழுக்கையுடன் இருக்க மாட்டாரே? எவ் வளவு 'ஸ்மார்ட்டாக' சுறுசுறுப்புடன் இருப் பார்? எப்படிக் கேட்பது? மண்டையைக் குழப்பிக் கொண்டேன். கேட்காமல் வீட்டுக் குப் போனால் கட்டாயம் தூக்கம் வராது.

விஸ்தாரமாக ராகம் பாடி கீர்த்தனை ஸ்வரப் பிரஸ்தாரங்கள் பாடி மிருதங்க வித் வானுக்குக் கைகாட்டி விட்டார்.

இதுதான் சமயமென்று ''கச்சேரி பிர மாதம்!'' என்றேன் அந்த நபரிடம்.

''பொருசுகம் அம்மா! இந்த நாளிலே இப் படி யார் பாடறா? எங்க நாளிலே எல்லாமே இந்த ஸ்டாண்டர்ட்தான் இருப்பா! இந்த மாதிரி மணியா கச்சேரி கேக்கும்போது பால்யம் திரும்பின சந்தோஷம் வந்துட்டது. உங்களுக்குத் தெரியுமோ? கல்கி அந்த நாளிலே மும்மணிகளும் மாணிக்கமும்ன்னு எழுதுவார். அதாவது மதுரை மணி, ஜி. என். பி. பாலக்காடு மணி, ராஜமாணிக்கம் பிள்ளை இவாளைப் பத்தி அழகா எழுதுவார். இந்தக் கச்சேரியைக் கேட்கும்போது அந்தக் காலத்து மனுஷான் இல்லையேன்னு இருக்கு!'' என்று நிறுத்தாமல் சொல்லிக் கொண்டே போனார்.

''நீங்க வேலூரிலே இருந்திருக்கேளா?'' என்றேன் மெதுவாக.

''இருந்திருக்கேனாவது? அங்கேதான் வாழ்க் கையை ஆரம்பித்து ரிடையராகி அப்புறமும் ஏழெட்டு வருடங்கள் இருந்தேன். வயசாகி முடியலை. இங்கே பிள்ளையிடம் வந்துட் டேன்!'' என்றார்.

''உங்க பேரைத் தெரிஞ்சுக்கலாமா?'' என் றேன் தழுதழுத்த குரலில்.

''கிருஷ்ணசாமி!'' என்றார் ஒரு தனி அழுத்தம் கொடுத்தவாறு.

என் உடம்பெல்லாம் புல்லரித்தது. ''மாமா! நீங்க கிட்டு மாமா இல்லையோ?'' என்றேன் ஆவேசத்தோடு.

''ஆமாம்! நீ... நீங்கள்...'' என்று தடு மாறினார்.

''மாமா! என்னை நீ என்றே கூப்பிடுங்கோ. நான் ஜானகி. உங்க ஜானுக்குட்டி மாமா!'' என்றேன் உணர்ச்சிப் பெருக்குடன்.

மாமா ஒரு நிமிடம் திகைத்தே போனார். என்னைக் காலிலிருந்து தலை வரை இரண்டு முறை பார்த்தார். ''நம்ம ஜானகி, ஜானுக் குட்டியா? நீயா? கொஞ்சம் கூட அடை யாளமே தெரியலையே. என்னை எப்படி அடை யாளம் கண்டுபிடிச்சே?'' என்றார் கரை காணாத வாஞ்சையுடன்.

''நீங்க அப்படியேதானே மாமா இருக் கேள்!'' என்று பச்சைப் பொய்யைச் சொன் னேன். மாமாவுக்குப் பரம சந்தோஷம். மாப்பிள்ளையிடம் கொஞ்சம் உட்கார்ந்து பேச றேன்!'' என்று எங்கள் இருவர் நடுவில் வந்து உட்கார்ந்தார்.



கச்சேரி முடிந்து வெளியே வந்து பதினைந்து நிமிடங்கள் அளவளாவி னோம். மாமிக்குக் கால் எலும்பு முறிந்து படுக்கையில் இருக்கிறாளாம். என் பெற்றோர்களை நினைத்துக் கண் கலங்கி என்னையும் கண் கலங்க வைத்தார்.

''இந்தாம்மா ஜானு! நானும் மாமியும் இருக்கிறவரை உனக்குப் பிறந்தகம் இல்லேன்னு நினைக்காதே. மாப்பிள்ளையை அழைச்சுண்டு வா! மாமி உங்க இரண்டு பேரையும் பார்த்தால் சந்தோஷப்படுவா!'' என்று திரும்பத் திரும்பச் சொன் னார்.

காரில் கொண்டு விடுகிறோமென்று நானமட்டும் சொன்னோம். வாடிக்கை ரிக்ஷாக்காரன் காத்துக் கொண்



## அருள்வாக்கு

எனக்கு அப்போது இளவயஸு. ப்ரொபஸர் ராமமூர்த்தி என்று ஒருத்தர் இருந்தார். ராமமூர்த்தியை ஸாண்டோ என்றே சொல்வார்கள். தெலுங்கர். ஸர்க்கஸ் கம்பெனி நடத்தி வந்தார். நடத்தினது மட்டுமில்லை. இவரே ஸாண்டோவானதால் ஆச்சரியமான Feats பண்ணிக் காட்டுவார். ஒன்று சொல்கிறேன். தன் இடுப்பைச் சுற்றிப் பக்கத்துக்கு ஒன்றாக Ford காரைக் கயிற்றால் கட்டிக் கொண்டு, இரண்டு என்ஜினையும் ஸ்டார்ட் பண்ணி விடுவார். அப்படியே இரண்டு மாக இவரை நசுக்கித் தொகையல் (துவையல்) பண்ணிவிடுமோ என்று ஜனங்கள் பிரமித்துப் பார்ப்பார்களாம். மனுஷ்யரானால் கொஞ்சம் கூட அலட்டிக்கொள்ளாமல் அந்த இரண்டு காரையும் இரண்டு உள்ளங்கையாலேயே மறித்துக்கொண்டு அவை ஓட முடியாதபடி நிறுத்தி வைத்திருப்பாராம். இவருடைய கம்பெனி கும்பகோணத்தில் 'காம்ப்' பண்ணியிருந்தபோது, நான் வந்து ஸர்க்கஸ்பார்க்க வேண்டுமென்று ரொம்பவும் கேட்டுக் கொண்டார். மடத்தில் அப்படி சம்பிரதாயமில்லை என்று சொன்னதும், மடத்துக்குப் பின்னாடி விஸ்தாரமான பூமி உண்டு. அங்கே தன் கோஷ்டியில் சில பேரோடு வந்து, சில 'ஸர்க்கஸ் அயிட்டங்'களைப் பண்ணிக் காட்டினார். இப்படியும் ஒரு தேஹ பலமுண்டா என்று ஆச்சரியமாயிருந்தது. அவர் கதை எதற்குச் சொல்கிறேன் என்றால் இப்படிப்பட்ட பலிஷ்டர் சுத்த வெஜிட்டேரியனாகவே இருந்தவர் என்பதற்காகத்தான். மகா பலிஷ்டரான ஆஞ்சநேயரே சாக போஜனியான வானரம்தானே?

ஏதோ டி. பி. மாதிரி சில உடம்பு (வியாதி)களுக்குமாம்ஸாதிகளை டாக்டர்கள் பிரிஸ்கிரைப் பண்ணினாலும் வயிற்று வியாதிகள், ப்ரஷர் (ரத்த அழுத்தம்) ஹ்ருதய ரோகங்கள் என்றெல்லாம் ஏற்பட்டால் மாம்ஸத்தில் ஜாஸ்தி fat, அது கூடாது என்று நிறுத்தித்தான் விடுகிறார்கள். நான்-வெஜிடேரியன்களுக்கு எந்த உடம்பு வந்தாலுமே சீக்கிரத்தில் குணமாவதில்லை என்றுகூடச் சொல்வதுண்டு.

சாக போஜனத்துக்கு பலம் இல்லாமலில்லை என்பதற்கு இன்னொன்றும் சொல்கிறேன். சிங்கம், புலி மாதிரி ரொம்பவும் பலமுள்ள எந்த 'கார்னிவோரஸ்' அனிமலை (மாமிசம் சாப்பிடுகிற மிருகத்தை) எடுத்துக் கொண்டாலும், அது ஆஹாரமாகச் சாப்பிடுகிற பிராணி எப்படி இருக்கிறது என்று பாருங்கள். இது (சாப்பிடப் படும் பிராணி) சாகபக்ஷிணியாகத்தான் இருக்கும். மாம்ஸ பக்ஷிணியான சிங்கமும், புலியும் சாக பக்ஷிணிகளான ஆடு மாடு போன்றவற்றைத் தின்னும். இன்னொரு மாம்ஸ பக்ஷிணியைத் தின்னாது. சிங்கமும் புலியும் ஒன்றை யொன்று அடித்துக் கொன்று சாகலாம். ஆனாலும் இவற்றில் ஒன்றின் மாமிசத்தை இன்னொன்று தின்னாது. இதிலிருந்து மாமிச பக்ஷிணிகளின் பலத்துக்கும் (அவை தின்கிற சாக பக்ஷிணிகளின் த்வாரா) காரணமாயிருப்பது புல்லும் தானியமும் மட்டையுந்தான் என்று தெரிகிறதல்லவா?

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய ஸ்வாமிகள்

டிருக்கிறான் என்று பின்னையுடன் அதில் ஏறிப் பிரியா விடை பெற்றுக் கிளம்பினார்.

கூட்டம் கலைந்து, காரை எடுத்துக் கிளம்பினோம். ''ஏன் வாயே திறக்க மாட்டேன் என்கிறாய்?'' என்று ஆச்சரியத்தோடு என் கணவர் கேட்டார். ''ஏதோ பழைய நினைவுகள்'' என்றேன்.

''நானைக்கு வேணும்னா அவர்கள் வீட்டுக்குப் போவோம்! உனக்கு ஒரு ஆறுதல் இருக்கும்!'' என்றார். ''வேண்டாம்! பழைய இனிய நினைவுகள் அப்படியே இருக்கட்டும். மாமாவைப் பார்த்தே எனக்குப் பாதி சப்பென்று ஆகிவிட்டது. இன்னும் படுத்த படுக்கையாகக் கிடக்கும் மாமியைப் பார்க்க வேண்டாம். இருபது வருடங்களுக்கு முன் அவர்கள் இருந்ததை நினைத்துக் கொண்டே இருக்கிறதுதான் எனக்குப் பிடித்திருக்கிறது!'' என்றேன். ''பகவானைப் போல் ஒப்பனைக் கலைஞர் இனி யார் இருப்பார்கள்? எப்படி இருந்த கிட்டு மாமாவை எப்படி ஆக்கி விட்டார்!''

எங்கள் கார் முன்னே இரண்டு கார்கள் ஊர்வலம் மாதிரி ஊர்ந்து போனதால் எங்கள் காரை இவர் நிறுத்தினார். பக்கத்தில் ஒரு ரிக்ஷாவில் குரல் கணீரென்று கேட்கிறது. ''ஜானுக்குட்டி இவன்தான்னு யாராவது சத்தியம் பண்ணிச் சொன்னாக்கூட நான் நம்பமாட்டேன். எத்தனை அழகா மான் மாதிரி துள்ளிக் குதித்துக் கொண்டு வருவான்! என்ன பருமன்! என்ன தொந்தி! தலை வேறு நரைக்கத் தொடங்கிப் பாட்டி மாதிரி இருக்காளே! பகவான் மாதிரி மேக்கப்மேன் ஒருத்தரும் கிடையாது. இருபது வருடத்தில் எத்தனை மாறுதல்!'' என்று சொல்லிக் கொண்டே போனார் கிட்டு மாமா.

முன்னாடி நின்ற கார்கள் போகத் தொடங்கின. இவர் நமுட்டுச் சிரிப்புடன் என்னைப் பார்த்தார். நான் வாய் விட்டுச் சிரித்தேன்.

''இரண்டு பேருமே ஒருத்தர்மேல் ஒருத்தர் ஒரே அபிப்பிராயம்தான் வச்சு இருக்கோம்'' என்றேன்.

''அதிலேயும் பகவானைப் பெரிய ஹாஸ்யப் பிரியர் மாதிரி மேக்கப் மேனாக்கி விட்டீர்களே அதுதான் பெரிசு!'' என்று இவரும் சிரித்தார்.





சத்தான உணவு கிடைக்காதபோது குழந்தை தன்னுடைய ஒரு தனி உலகில் பதுங்கிக்கொள்கிறது. சுற்றியுள்ள உலகில் அதற்கு சுவாரஸ்யம் குறைந்துபோகிறது. உணவுப்பற்றாக்குறையும், உடலில் சக்தியின்மையும் சேரும்போது கல்வி கற்கும் வாய்ப்புக்களைக் குழந்தை பயன்படுத்திக் கொள்ளாமல் இருந்து விடுகிறது. நழுவிவிடும் வாய்ப்பு அதற்கு மறுபடி கிடைக்காமலே போய்விடலாம்.

முன்னேற்றம் அடைந்த நாடுகளின் மிக ஆபத்தான ஏற்றுமதி, குழந்தைகளுக்குப் பாலுணவு. வளர்ச்சியடையாத நாடுகளில் கல்வி அறிவில்லாத தாய்மார்கள் பால் பவுடரை அழுக்கு நீரில் கரைத்து விடுகிறார்கள்; அளவுக்கு அதிகமான நீரைச் சேர்த்துவிடுகிறார்கள்; பால் புட்டியைச் சரியாகக் கொதிக்க வைக்காமலிருந்து விடுகிறார்கள். பால் புட்டியின் இண்டு இடுக்குகள் கிருமிகள் உற்பத்திக்கு உகந்த இடமாகின்றன. புட்டிப் பால் பழக்கம் பின்தங்கிய நாடுகளில் நாளுக்குநாள் அதிகரித்து ஆயிரக் கணக்கான குழந்தைகளின் உயிரைப் பலிவாங்குகிறது. இதே நேரத்தில் பால் பவுடரை ஏற்றுமதி செய்யும் முன்னேறிய நாடுகளின் தாய்மார்களோ, புட்டிப்பாலின் தீமையையும், தாய்ப்பாலின் மகத்துவத்தையும் நன்கு உணர்ந்து விட்டனர். உலகெங்கும் தாய்மார்கள் தாய்ப் பால் புகட்ட ஆரம்பித்தால் ஓராண்டில் 10 லட்சம் குழந்தைகளை மரணத்தின் பிடியிலிருந்து காக்கலாம்.





# வாடக்கூடாத குழந்தை மலர்கள்

● வாந்திபேதியால் ஐம்பது லட்சம் குழந்தைகள் ஆண்டுதோறும் உலகில் மடிகின்றன. உடலில் உள்ள நீரெல்லாம் வெளியேறி அதனாலேயே மரணம் சம்பவிக்கிறது. தண்ணீரில் ஒரு ஸ்பூன் உப்பு, ஒரு ஸ்பூன் சர்க்கரை போட்டுக் கரைத்து அவ்வப்போது குழந்தையைக் குடிக்கச் செய்தால் பிழைக்கும்.



● உலகத் தலைவர்களெல்லாம் பின்தங்கிய நாடு ஒன்றில் ஒரு கிராமத்தைச் சுற்றி வந்தால் சத்துணவு இன்மையால் ஏற்படும் குன்றிய வளர்ச்சியில் இரண்டு சதவீதத்தைத் தான் அவர்கள் அடையாளம் கண்டுகொள்வார்கள்! 98 சதம் குழந்தைகளின் குன்றிய வளர்ச்சி வேலெழுந்தவாரியாக நோக்குகையில் தெரியவே செய்யாது! இதில் யாரும் ஏமாந்து போய்விடக் கூடாது! ஒரு கிராமத்துக்குக் கூறப்பட்ட இக்கணக்கு பின்தங்கிய நாடுகள் அனைத்துக்குமே பொருந்தும்!

நன்றி: யூனிஸெஃப்

## அத்தியாயம் 35

### சகோதரி சாரதாமணி

ஸர்வோத்தம சாஸ்திரிக்கு அன்றிரவெல்லாம் தூக்கம் வரவில்லை. கதைகளில் வரும் காதலர்களைப் போல் ''எப்போது இரவு தொலையும் பொழுது விடியும்?'' என்று அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தார். காலையில் முதல் காரியமாகத் தமது மனைவியை அழைத்து, ''நேற்றிரவு ஒரு நாடகத்துக்குப் போயிருந்தேன். ரொம்ப நன்றாயிருந்தது. அப்படிப்பட்ட நாடகம் நான் பார்த்ததே யில்லை. இன்று இரவு உன்னையும் அழைத்துப்போக உத்தேசித்திருக்கிறேன். வருகிறாயா?''என்றார்.

''உங்களுக்கே இவ்வளவு கருணை பிறந்து ஓரிடத்துக்குக் கூட்டிக்கொண்டு போகிறேன் என்று சொல்லும் போது, நான் மாட்டேன் என்று சொல்வேன்? அதற்கென்ன, போவோம். ஆனால், இன்றைக்கு அந்தப் பெண் அபிராமியைப் பார்க்க வேண்டாமா?'' என்றாள் மீனாட்சி அம்மாள்.



''பார்த்தால் போகிறது. ஏன், அவளையும் நாடகத்துக்குக் கூட்டிக் கொண்டு போகவேண்டு மென்று லும்போகலாம்.''

''என் மனத்தில் இருக்கிறதை அப்படியே தெரிந்து கொண்டு விட்டீர்களே! ஆனால் உங்கள் தமக்கை சாரதாமணி என்ன சொல்வாரோ என்னமோ? ஒரு மாதிரி இருக்காயிற்றே? அழைத்துக்கொண்டுபோகக் கூடாது என்று சொன்னாலும் சொல்வார்.''

''ஆமாம்; அவளிடம் இதைப் பற்றிச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. 'ஒரு நாளைக்கு எங்களுடன் இருக்கட்டும். நாளைக்குக் கொண்டு விட்டு விடுகிறோம்' என்று சொன்னால் போயிற்று.''

''போலீஸ்காரர்களுக்கு இதெல்லாம் சொல்லியா கொடுக்க வேணும்?'' என்றாள் அவருடைய பத்தினி.



* * *

**சா**ஸ்திரி அன்றெல்லாம் வெகு சுறுசுறுப்பாக இருந்தார். நாடகக் கொட்டகைக்குப் போய் பத்துப் பதினைந்து வரிசைகளுக்குப் பின்னால் மூன்று ஸீட்டுகள் ரிசர்வ் பண்ணினார். முன் வரிசையிலே காலி இடம் இருக்கிறது என்று சொல்லியும், அவர் பிடிவாதமாக வேண்டாம், பின் வரிசைதான் வேண்டும்'' என்று சொல்லி விட்டார்.

பிறகு அவர் போலீஸ் கமிஷனர் ஆபீஸுக்குப் போய், கமிஷனரைப் பேட்டி கண்டு வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார். இப்படிப் பல காரியங்கள் செய்துவிட்டு, வீட்டுக்குத் திரும்பினார்.

சாயங்காலம் அவரும் அவர் மனைவியும் சரஸ்வதி வித்யாலயத்துக்குச் சென்றார்கள். அந்த வித்தியாலயத்தின் தலைவி சாரதாமணி நமது சாஸ்திரியினுடைய ஒன்றுவிட்ட சகோதரி. அவருடைய தகப்பனார் ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருந்து காலஞ்சென்றவர். துரதிர்ஷ்டவசமாக சாரதமணியின் மண வாழ்க்கை அவ்வளவு சந்தோஷமானதாயில்லை. கல்யாணமான இரண்டு மூன்று வருஷத்துக்கு அப்புறம் அவருடைய கணவன் யாரோ ஒரு சட்டைக்காரியுடன் கப்பலேறி சிங்கப்பூருக்குப் போய் விட்டான். அப்புறம் திரும்பி வரவேயில்லை.

இவ்வாறு பெரும் துர்ப்பாக்கியத்துக்காளான சாரதாமணிக்கு அவருடைய தகப்பனார் நிறையச் சொத்துக்கள் வைத்து விட்டுக் காலஞ்சென்றார். சாரதாமணியும் நாளடைவில் தம்முடைய துக்கத்தை மறந்து சமூக சேவையில் ஈடுபட ஆரம்பித்தார். தம்மைப் போலவே பொது ஊழியத்தில் பற்றுக் கொண்ட இன்னும் சில ஸ்திரீகளுடன் சேர்ந்து இந்த சரஸ்வதி வித்யாலயத்தை அவர் ஆரம்பித்தார். நாளடைவில் மற்றவர்களுடைய சிரத்தை குறைந்துபோய்விட, வித்யாலயத்தின் பொறுப்பு முழுவதும் கடைசியாக அவர் மேலேயே சார்ந்துவிட்டது.

அப்படிச் சார்ந்தது முதல், வித்யாலயத்தில் அவருடைய சிரத்தையும் பன்மடங்கு அதிகமாயிற்று. அவரது உலகமே வித்யாலயத்துக்குள் அடங்கி

விட்டதென்று கூறலாம். ஒரு சங்கீத வித்வான் நன்ருய்ப் பாடுகிருர் என்று யாராவது சொன்னுல், ''அவர் நமது வித்யாலயத்துக்கு ஒரு 'பெனிபிட் பர் பார்மன்ஸ்' (உதவிக் கச்சேரி) கொடுப் பாரா?'' என்று கேட்பார். யாராவது ஒரு தலைவர் சென்னைக்கு வருகிருர் என்று கேள்விப்பட்டால், அவரை வித் யாலயத்துக்கு வரச் செய்ய உடனே முயற்சி தொடங்கி விடுவார். யாரா வது ஒரு வக்கீலுக்கு நிறைய வரும்படி வருகிறதென்று கேள்விப்பட்டால் ''அவ ரிடம் தமது வித்யாலயத்துக்கு ஏதாவது நன்கொடை வசூலிக்க வேண்டுமே!'' என்று யோசனை செய்வார். யாராவது ஒரு பெண் முதல் வகுப்பில் பி.ஏ. பாஸ் செய்தாள் என்று அறிந்தால், ''அவளை நமது வித்யாலயத்தில் வாத்தி யாராகச் செய்து விட்டால் தேவலை'' என்றுதான் எண்ணமிடுவார்.

* * *

இத்தகைய அவருடைய சுபாவத்தை நன்கு அறிந்தவராதலால், சாஸ்திரி பேச்சின் ஆரம்பத்திலேயே, ''சாரதா! இந்த வித்யாலயத்தைப் பார்க்கும் போது நாங்கள் எல்லோரும் எதற்காக ஜீவித்திருக்கிறோம் என்று தோன்று கிறது. இப்பேர்ப்பட்ட உத்தமமான காரியத்துக்கு ஓர் உதவியும் செய்யாத ஜன்மமும் ஒரு ஜன்மமா?'' என்று புக ழுரையும் ஆத்ம நிந்தனையும் கலந்து கூறினர்.

''அதென்ன அப்படிச் சொல்கி ருய்? நீயுந்தான் பெரிய உதவி செய்திருக்கிருயே? அந்தப் பெண் அபி ராமியை எங்கள் வித்யாலயத்துக்கு அனுப்பியதே ஓர் உதவிதானே?'' என் ருர் சகோதரி சாரதாமணி.

''ஆனல் இந்த மாதிரி உதவி இன் னும் எத்தனையோ பேர் உங்களுக்குச் செய்யத் தயாரா யிருப்பார்கள். பெண் களை அனுப்பி வைப்பதுதானு கஷ்டம்?'' என்றுள் மீனுட்சி.

''அப்படியில்லை அம்மா! அபிராமி யைப் போன்ற புத்திசாலிப் பெண்ணை அனுப்பி வைத்ததே ஓர் உதவிதான்.''

''நிஜமாகவா? அவள் சமர்த்தா இருக்கிருளா?''

''அபிராமி ரொம்பச் சமர்த்து. வித் யாலயத்திலேயே சங்கீதத்தில் அவள் தான் முதல். இப்போது வித்யால யத்துப் பெண்களைக் கொண்டு ஒரு நாட கம் தயாரித்துக் கொண்டிருக்கிறோம். அதற்கு வேண்டிய பாட்டுக்கள் எல் லாம் அவள்தான் இட்டுக் கட்டுகிருள். அடாடா! எவ்வளவு நன்ருக இருக்- கின்றன!''

''இதைக் கேட்க ரொம்பத் திருப் தியா யிருக்கிறது. எப்படியாவது அவள் சந்தோஷமா இருக்க வேண்டும். இன்றைக்கு ஒரு நாள் அவள் எங்க ளோடு இருக்கட்டுமே. அழைத்துக் கொண்டு போய் நாளைக்குக் கொண்டு விட்டு விடுகிறோம்'' என்ருர் சாஸ்திரி யார்.

சாரதாமணி, ''அதற்கென்ன பேஷா கச் செய்யுங்கள்'' என்று சொல்லிவிட்டு அபிராமியை அழைத்து வர ஒரு பெண்ணை அனுப்பி வைத்தார்.

பிறகு, ''அந்தப் பெண் விஷயத்தில் ஒரே ஒரு சிரமம் இருக்கிறது. திடீர் திடீரென்று நினைத்துக் கொண்டு அழத் தொடங்கி விடுகிருள். அப்போதெல் லாம் அவளைச் சமாதானம் செய்வது பெருங் கஷ்டமா யிருக்கிறது. அவ ளுடைய அண்ணன் சங்கதி என்ன ஆயிற்று?'' என்று கேட்டார்.

''இன்னும் அகப்படவில்லை'' என்ருர் சாஸ்திரி.

''அதற்கென்ன, ஒரு நாளைக்குப் பிடித்து அந்தப் பையனை ஜெயிலுக்கு அனுப்பி விடுவீர்கள். உடனே போலீஸ் இலாகாவுக்கு ரொம்பக் கெடுதல் வந்துவிடும்....''

''பின்னே என்ன சொல்கிருய்? திருடர்களைப் பிடித்து ஜெயிலுக்கு அனுப்பா விட்டால், சமூகம் எப்படி நடைபெறும்?''

''ஆமாம்: திருடர்களை யெல்லாம் பிடித்து ஜெயிலுக்கு அனுப்புவதென் ருல், முதலிலே இந்த ஊரிலே இருக் கிற ஹைகோர்ட் ஜட்ஜ்கள், வக்கீல்கள்,

---

அவள்: என் காதலர் 'என்னுடன் பழகச் சம்மதம்தானே' என்று கேட் டார். நான் 'சம்மதம்' என்று சொன் னேன்!

இவள்: சரி, அதுக்கென்னடி இப்போ?

அவள்: 'சம்மதம்' சொல்லப் போய் இப்போது 'ஸம்' மாதம் ஆகிற மாதிரி பண்ணிட்டாரே! —எம். மாரிமுத்து



# கேஸியூபியுடன் உங்கள் நேரமே



## சேமிப்பு நேரம்

காலம் பொன்னானது. காலத்தில் கைகொடுக்கும் திட்டங்கள் பல கேஸியூபி அளிக்கிறது. உங்கள் சேமிப்பு விரைவாக வளர்வதுடன் உங்கள் தேவையான நேரத்திற்கு உதவுகிறது.

இப்போது கேஸியூபி உங்கள் சேமிப்பிற்கு 11 சதவீத வட்டி அளிக்கிறது.

எங்கள் திட்டம் ஒன்றைத் தேர்ந்தெடுத்து சேமியுங்கள். உங்களது சேமிப்பு சரியான நேரத்திற்கு கை கொடுப்பதை அறிவீர்கள்.

கேஸியூபியில் உங்கள் நேரம்
சேமிப்பு நேரம்




**கும்பகோணம் ஸிடி**
**யூனியன் பாங்க் லிட்**

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001

**பாதுகாப்பிற்கும் வளர்ச்சிக்கும்**

APRC

---

*தஞ்சை மாவட்ட எண்கண் ஸ்ரீ வேலவன் நித்திய பூஜை அறக் கட்டளைக்கு பொது மக்கள் தங்கள் நன்கொடைகளை எவ்வித செலவுமின்றி எங்கள் வங்கியின் எல்லா கிளைகளின் மூலமும் அனுப்பலாம்.*

உத்தியோகஸ்தர்கள், சட்ட சபை மெம்பர்கள் எல்லாரையும் ஜெயிலுக்கு அனுப்பி வைக்க வேண்டும். நீயும் நானும் கூடப் போக வேண்டியதுதான். மகாத்மா காந்தி என்ன சொல்கிறார்? நம்முடைய கையால் உழைத்துப் பாடுபட்டுச் சம்பாதிப்பதைத் தவிர பாக்கிவிதத்தில் பெறும் சொத்தெல்லாம் திருட்டுத்தான் என்கிறார். அந்தப்படி பார்த்தால் இன்றைய தினம் பங்களாக்களில் வாழ்ந்து மோட்டார் சவாரி செய்துகொண்டிருப்பவர்கள் எல்லாம் முதலிலே ஜெயிலுக்குப் போக வேண்டும் இல்லையா?''

''சாரதா! அவ்வளவு பெரிய தத்துவம் நமக்குக் கட்டி வராது. அது வருகிறபோது வரட்டும். ஆனால் இன்னொரு விதத்தில் நீ சொல்கிறதை நான் ஒப்புக்கொள்கிறேன். சாதாரணமாய் ஜெயிலுக்குப் போகிற திருடர்களைவிட வெளியில் இருக்கும் திருடர்கள்தான் அதிகம். இதைக் கேள்: எங்கள் ஜில்லாவில் ராவ் சாகிப் சட்டநாத உடையார் என்று ஒரு பெரிய மனுஷர் இருக்கிறார். அவர் சுங்கத் திருடர் என்பது எல்லோருக்கும் தெரியும். காரைக்காலிலிருந்தும், புதுச்சேரியிலிருந்தும் வரி கொடாமல் சாமான் கொண்டு வருவதுதான் அவருக்கு வேலை. இதிலேயே கொழுத்துப் பணக்காரராகிவிட்டார். ஆனாலும் அவரை இன்றுவரையில் ஒன்றும் செய்ய முடியவில்லை. முதலிலே போலீஸையே கையில் போட்டுக் கொண்டு விடுகிறார். அது முடியாமற் போனால் — கொஞ்சம் மனச்சாட்சியுள்ள போலீஸ்காரன் நடவடிக்கை எடுக்க முயன்றால் — மாஜிஸ்ட்ரேட்டுகள் அவர் பக்கம். தப்பித் தவறி மாஜிஸ்டிரேட்டு யோக்கிராயிருந்து விட்டால், உடையார் இன்னும் மேலே போய்க் காரியத்தை ஜெயித்துக் கொண்டு வந்து விடுகிறார். எங்களுக்குத்தான் அசட்டுப் பட்டம் கிடைக்கிறது. இரண்டு மாதத்துக்கு முன்பு நடந்த ஒரு மோட்டார் கேஸில் அவர் கலந்திருந்ததற்கு நல்ல ருசு இருந்தது; ஆனாலும் பிரயோசனமில்லை. இரண்டு நாளைக்கு முன்பு அவருக்கு ஆனரரி மாஜிஸ்டிரேட் வேலை கொடுத்திருப்பதாய்ப் பத்திரிகைகளில் வெளியாகி யிருந்தது. இதற்கு என்ன சொல்கிறாய்?''

''என்னத்தைச் சொல்கிறது? உங்கள் உடையாரைப் போன்ற எத்தனையோ உடையார்கள் நமது சமூகத்தில் இருக்கிறார்கள். இதற்கெல்லாம் விமோசனம் ஒன்றே ஒன்றுதான். மகாத்மா சொல்கிறபடி அவரவர்களும் கையால் உழைத்து ஜீவனம் செய்ய வேண்டும். ஒருவருடைய உழைப்பைக்கொண்டு இன்னொருவர் வாழ்வு நடத்துவது என்பது கூடாது. இந்த நோக்கத்துடனேதான் வித்யாலயத்தில் எல்லாப் பெண்களுக்கும் ஏதாவது ஒரு கைத்தொழில் கற்றுக் கொடுக்கிறோம். அவர்களுடைய கைவேலைகளையெல்லாம் நீங்கள் பார்க்கவில்லையே? வாருங்கள் காட்டுகிறேன்.'' என்று சகோதரி சாரதாமணி சொல்லி சாஸ்திரியையும், அவருடைய மனைவியையும் வித்யாலயத்தைச் சுற்றிக்காட்ட அழைத்துச் சென்றார்.



பின்லாந்தில் வசிக்கும் விவசாயி ஒருவர் தன் சொத்து முழுவதையும் பேய்க்குச் சேர்த்து விடுங்கள் என்று உயில் எழுதிவிட்டு இறந்தார். அந்த விசித்திரமான உயிலைப் படித்து என்ன செய்வது என்று புரியாமல் எல்லோரும் திகைத்தார்கள். இறுதியில் அரசாங்கமே அந்தச் சொத்துக்களை எடுத்துக் கொண்டது! —எஸ். வெங்கடேசன்

## அத்தியாயம் 36

## குயில் பாட்டு

அபிராமியை நாம் பார்த்து ஒரு வருஷத்துக்கு மேலாகி விட்டதல்லவா? திருப்பரங்கோயிலிலிருந்து சென்னைக்குப் போகும் ரயிலில் ஸ்ரீமதி மீனாட்சி அம்மாளுடன் அவளை நாம் கடைசியாகப் பார்த்தோம். இப்போது சரஸ்வதி வித்யாலயத்தின் மதில் சூழ்ந்த விஸ்தாரமான தோட்டத்தில் ஒரு மூலையில், பூத்துக் குலுங்கிக்கொண்டிருந்த ஒரு மர மல்லிகை மரத்தின் அடியில் ஏறக் குறைய சம வயதுடைய ஒரு தோழியுடன் அவளைக்காண்கிறோம். ஒரு நிமிஷம் அபிராமியை அடையாளம் கண்டு பிடிப்பது கூட நமக்குக் கஷ்டமாயிருக்கிறது. முன்னே அவளை நாம் பார்த்தபோது இன்னும் குழந்தையாகவே இருந்தாள். இப்போது யுவதி

யாகிவிட்டாள். முன்னே பட்டிக்காட்டுப் பெண்ணைப் போல் பாவாடை, தாவணி அணிந்து கொண்டிருந்தாள். இப்போது காலேஜ்மாணவியைப்போல், ஜோராகப் பின்னல் தலைப்புத் தொங்க விட்டுப் புடவை உடுத்திக் கொண்டிருந்தாள். தலை மயிரைக் கோண வகிடு பிளந்து தளர்ச்சியாகப் பின்னிவிட்டுக் கொண்டிருந்தாள். முகத்திலே இருந்த குறுகுறுப்பு மட்டும் அப்படியே இருந்தது. எதைப் பார்த்தாலும், எதைக் கேட்டாலும், அதிசயத்துடன் மிரண்டு விழிக்கும் கண்களும் அப்படியே மாறுதலின்றி இருந்தன.




இன்னும் கொஞ்ச நாளில் கார், லாரி, ஸ்கூட்டர், டயர்கள் எல்லாம் விதவிதமான கலர்களில் வரப்போகிறது. அவரவர்கள் காரின், பாடியின் நிறத்துக்கு ஏற்றவாறு டயர்களை மாட்டிக் கொள்ளலாம். அமெரிக்காவில் உள்ள ஒரு நிறுவனம் கலர் டயர்களைத் தயாரிக்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறது.

ஆதாரம்: பிஸினஸ் வோர்ல்டு

எம். மாரிமுத்து

அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு கிணறும் அதைச் சுற்றிச் சில கமுகு மரங்களும் இருந்தன. அந்த மரங்களில் ஒன்றிலிருந்து ஒரு குயில் 'கக்கூ' 'கக்கூ' என்று கூவிற்று.

''அபிராமி! பிலஹரியில் ஒரு குயில் பாட்டுப் பாடுவாயே! அதைப் பாடு'' என்றாள் லலிதா. அபிராமி பாடத் தொடங்கினாள்.

ராகம்: பிலஹரி) (தாளம்: ஆதி

**வேலனையே அழைப்பாய்-**
**விந்தைக் குயிலே!**

**கோலக் கிளியைத் துணை**
**கூட்டிச் சென்றுகிலுமென் (வேல)**

**நீல வெளி தனிலே**
**நிமிர்ந்து பறந்து பாடி**

**நேரஞ் செய்யாமலிந்த**
**நிமிஷம் எழுந்து வர (வேல)**

**சோலையழகும் சொர்ணம்**
**ஓடி ஒளிர்ந்து பாயும்**

**ஓலைக் குருத்தும் தென்னம்**
**பாளை வெடித்த பூவும்**

**மாலை வெய்யிலும் மஞ்சள்**
**கோலமுங் கண்டு மனம்**

**பாலித்தருள் செய் யென் றிப்**
**பேதை யுரைத்ததாக (வேல)**

நெடிது வளர்ந்து அடர்த்தியாகத் தழைத்திருந்த மர மல்லிகை மரத்தின் மேல் சற்று பலமான காற்று அடிக்க அதிலிருந்து புஷ்பங்கள் பொல பொல வென்று உதிர்ந்து அபிராமியின்மேலும் அவள் தோழியின் மேலும் விழுந்தன.

''பார் அபிராமி! உன் மேல் புஷ்ப மாரி பெய்கிறது. உன்னுடைய பாட்டைக் கேட்டுவிட்டுத் தேவர்கள்தான் பூமழை பெய்கிறார்கள் போலிருக்கிறது'' என்றாள் லலிதா.

இப்படிச் சொன்னவள், அபிராமியின் கண்களில் ஜலம் துளித்திருப்பதைக் கண்டு மனம் கலங்கி, ''இதென்ன அபிராமி! உன் கண்களில் ஏன் ஜலம் வருகிறது? இவ்வளவு உருக்கமாய்க் கூப்பிட்டும் அந்த வேலன் வரவில்லையே யென்றா?'' என்பதாகப் பாதிக் கவலையுடனும் பாதிப் பரிகாசமாகவும் லலிதா கேட்டாள்.

'' லலிதா! திருப்பரங்கோவிலில் நானும்என் அண்ணனும் சந்தோஷமாகயிருந்த காலத்தில் இந்தப் பாட்டை நான் இட்டுக்கட்டினேன். அதைத் திருப்பித் திருப்பி பாடச் சொல்லிக் கேட்டு அவன் சந்தோஷப்படுவான். கடைசி நாள் அன்றைக்குக் கூட....'' என்று அபிராமி கூறி மேலே பேச முடியாமல் விம்மினாள்.

''சற்று இரு, அபிராமி! — ஏதோ சத்தம் கேட்டதே!— அது என்ன?'' என்று லலிதா நாலு பக்கமும் கலக்கத்துடன் திரும்பிப் பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை.

''வேறு யாரோ விம்மி அழுதாற் போலிருந்தது. என்னுடைய பிரமையோ

அல்லது பக்கத்துச் சாலையில்தான் யாராவது அழுது கொண்டு போகிறார்களோ'' என்றாள்.

அபிராமிக்கு என்னவோ அன்று பழைய ஞாபகங்கள் பொங்கிக்கொண்டு வந்தன. ''லலிதா! பாவி நான் இங்கே சௌக்கியமாய் இருக்கிறேன். சந்தோஷமாய் ஆடிப் பாடிக் கொண்டு காலங் கழிக்கிறேன். முத்தையன் எந்தக் காட்டில் என்ன கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறானோ? ஐயோ! என் அண்ணன்! உலகத்திலே ஒருவருக்கு ஒரு தீங்கு நினைக்காதவன். அவனுக்கு வந்த கஷ்டமெல்லாம் என்னால்தான். ஆனாலும் நான் இங்கே சுகமாயிருக்கிறேன்; பகவானே!'' என்று பரபரப்புடன் பேசிக்கொண்டு போனாள்.

''ஏன் அபிராமி, உன்னை நீயே நொந்து கொள்கிறாய்? உன் அண்ணனுடைய தலைவிதி அது. திருட்டு, கொள்ளையில் ஒருவன் இறங்கின பிற்பாடு அவனைப் பற்றிக் கவலைப்படுவதில் என்ன பிரயோஜனம்?''

''லலிதா! உனக்கென்ன தெரியும்? என் அண்ணனா திருடன்? அவனா கொள்ளையடிக்கக் கூடியவன்? ஒரு நாளுமில்லை. எல்லாம் பொய். நான் பிறந்த வேளை, அவன் இப்படியெல்லாம் கஷ்டப்பட வேண்டுமென்று ஏற்பட்டிருந்தது.''

❋ ❋ ❋

**அ**வள் அவ்வாறு சொல்லிக்கொண்டிருந்தபோது, தூரத்திலிருந்து ''அபிராமி! அபிராமி!'' என்று கூப்பிடும் குரல் கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு பெண் வந்து, ''அபிராமி, இங்கே என்ன செய்கிறாய்? உன்னைத் தோட்டமெல்லாம் தேடிக் கொண்டு வருகிறேன். யாரோ திருப்பரங்கோவிலிலிருந்து மனுஷாள் வந்திருக்கிறார்களாம். அம்மாள் உன்னை உடனே கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்கள்'' என்றாள்.

சாஸ்திரியும் அவரது மனைவியும் அபிராமியைச் சந்தித்தது குறித்து அதிகம் விஸ்தரிக்க வேண்டிய அவசியமில்லை. எத்தனையோ தினங்களுக்குப் பிறகு தன்னுடைய ஊர் மனுஷ்யர்களைக் கண்டதும் அபிராமிக்குச் சந்தோஷமாய்த்தான் இருந்தது. அவர்கள் தங்களுடன் ஒரு நாள் இருக்கும்படி அழைத்தபோது உற்சாகத்துடன் சென்றாள். நாடகம் பார்க்கப் போகவும் மகிழ்ச்சியுடன் சம்மதித்தாள்.

அன்றிரவு நாடகக் கொட்டகையில் ஏற்கனவே 'ரிசர்வ்' செய்திருந்த இடங்களில் மூன்று பேரும் சென்று உட்கார்ந்தார்கள்.

உட்கார்ந்தவுடனே சாஸ்திரி சுற்று முற்றும் பார்த்தார். அவருக்குப் பின்னால் இரண்டு வரிசை தள்ளி நாலைந்து ஆசாமிகள் சேர்ந்தாற் போல் உட்கார்ந்திருந்தார்கள். குறிப்பிட்ட சங்கேதத்தின் மூலம் அவர்கள் போலீஸ்காரர்கள் என்பது அவருக்குத் தெரிந்து போயிற்று.

## இந்திராவின் இடம்

அமெரிக்க ஆண்கள் 1982ம் ஆண்டு மிகவும் பாராட்டிய பத்துப் பெண்களில் பிரதமர் இந்திராவுக்கு எட்டாவது இடமும், தாட்சருக்கு முதல் இடமும் தந்துள்ளனர். ஆனால் அமெரிக்க மகளிர் விரும்பும் பெண்களின் பொதுப் பட்டியலிலோ அல்லது பத்து விருப்பங்களிலோ இந்திராவின் பெயர் இல்லை.

—ஏ. தங்கமுத்து




அபிராமி நாடகத்தின் ஆரம்பம் முதலே மிக்க ஆவலுடன் பார்த்து வந்தாள். ஆனால் மேடைக்குத் திருடன் வந்ததிலிருந்து அவள் மகுடியின் சங்கீதத்தினால் கட்டுண்ட பாம்பைப் போல் ஆனாள். கண்ணைக் கொட்டாமல் அவனைப் பார்த்த வண்ணம் இருந்தாள். இடையிடையே அவளுடைய தேகத்தில் இன்னதென்று விவரிக்க முடியாத படபடப்பு உண்டாயிற்று. அப்போதெல்லாம், பக்கத்திலிருந்த மீனாட்சியம்மாளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

(தொடரும்)

### குடிசையில்

**கண்** விழித்த செண்பகம், குடிசையின் மேல்புற வரிச்சு வழியே பீறிட்ட வெளிச்சத்தைக் கண்டதும் அரக்கப் பரக்க எழுந்தாள். மணி நிச்சயமாக ஏழைத் தாண்டியிருக்கும் என்கிற எண்ணம் மனசுக்குள் மோத, அவசரமானாள்.

அருகிலேயே படுத்துக் கிடந்த தன் பத்து வயது மகள் பாப்பாத்தியை உசுப்பினாள்... ''ஏ....பாப்பாத்தி.... எழுந்திரு... ஏகப்பட்ட நேரமாகிப் போச்சு. பண்ணையாருக்கு இன்னிக்குப் பொறந்த நாளுன்னு சொல்லி என்னைக் கொஞ்சம் சீக்கிரமா வரச் சொல்லியிருந்தா பண்ணையார் ஆட்டம்மா... நான் பாட்டுக்கு மூதேவி கணக்கா தூங்கிருக்கேன்....''

பாப்பாத்தி பிரிபிரியாய் அவிழ்ந்து தொங்கிய முடிக் கற்றைகளில் கையை நுழைத்து 'வறட் வறட்' என்று சீறிக் கொண்டபடியே எழுந்து உட்கார்ந்தாள். கண்களில் தூக்கம் இன்னமும் பாக்கியிருந்தது.

''தம்பி பாலு எந்திரிச்சதும் குளிக்க வெச்சு பத்துப் பைசாவுக்கு கொள்ளுவாங்கிக்கொடு பனையதைக் கரைச்சுக் குடிக்க வைய்யி... நீயும் சாப்பிடு. நான் மத்தியான்னம் ஒரு மணிக்குள்ளாற வந்துடறேன்....'' — கட்டியிருந்த கந்தல் சேலையை அவிழ்த்துவிட்டு சுமாரான அழுக்கில் இருந்த மற்றொரு சேலைக்கு மாறிக் கொண்டே சொன்னாள் செண்பகம். மார்பின் கனபரிமாணங்களை கிழிசல் ஜாக்கெட்டில் கச்சிதமாக அடக்கி முடிச்சில் பின்னைக் குத்திக் கொண்டாள்.

''ஏம்மா.... பண்ணையாருக்குப் பொறந்த நாளுன்னு சொன்னியே... போன வருசம் மாதிரியே மத்தியானத்துக்குப் பால் பாயசம், வடை, அவியல், கட்டுச் சோறு எல்லாமும் கொண்டு வருவியா?''— பாப்பாத்தி நாக்கில் நீர் ஊறக் கேட்டாள்.

செண்பகம் புன்னகைத்தாள்.

''எல்லாமே கொண்டுட்டு வர்றேன்.''

பாப்பாத்தியின் கன்னத்தைத் தடவிவிட்டு குடிசைக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள். தெரு ஏழரை மணிச் சூரியனின் வெய்யிலில் பளிச்சென்றிருந்தது.

செண்பகம் நடையின் வேகத்தைத் துரிதப்படுத்தி அந்தப் பொட்டல் வழியே புகுந்து பண்ணையார் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

### மண்டபத்தில்

**சுற்றி**லும் கோரைப் புற்கள் ஆளுயரத்துக்கு வளர்ந்து காய்ந்து கிடக்க — அதன் நடுவேயிருந்த சிதிலமாகிப் போன மண்டபத்தில் — ஆடுபுலி ஆட்டத்தில் ஆழ்ந்து போயிருந்த இரண்டு பேர்களில் ஒருவன் தலையை உயர்த்தினான். மண்டபத்தையொட்டின மாதிரி போன ஒற்றையடிப் பாதையில் செண்பகம் தெரிந்தாள்.

''காளிமுத்து... யார் போறான்னு பார்த்தியா?''

அடுத்தவன் தலை நிமிர்ந்தான். உற்சாகமாய்த் தொடையைத் தட்டிக் கொண்டு காதுவரை இளித்தான். ''அட! நம்ப செண்பகம்!'' என்றான்.

''என்னமா இருக்கா?'' நடந்து போய்க் கொண்டிருந்த செண்பகத்தையே வெறித்தான்.

''புருசன் செத்துப்போன கவலையிலே உடம்பு கரையும்னு சொல்லுவாங்க... இவளுக்குப் பாத்தியாடா தவசி...? உடம்பு முன்னைக்காட்டிலும் நிருநிருன்னு வந்திருக்கு. எல்லாம் பண்ணையார் ஆட்டுச் சோறு. மிச்சம் மீதியை அள்ளித் தின்கிறதாலே உடம்பு கின்னுன்னு இருக்கு.'' — காளிமுத்து எக்கிப் பார்த்துக் கொண்டே பார்வையிலிருந்து மறைய ஆரம்பித்து விட்ட செண்பகத்தை நோக்கிப் பெருமூச்செறிந்தான்.




''இவளைத் தொட்டுப் பார்த்துடணும்னு ரொம்ப நாளா என் மனசுக்குள்ளாற ஒரு நமைச்சல்... ஆனா அவ பார்க்கிறபார்வையே நெருப்பு மாதிரி இருக்கு. ரெண்டு மூணு தபா குடிசைப் பக்கமாப் போயி நடமாடிப் பாத்தேன்.... என் மூஞ்சியைப் பார்த்தாலே குடிசையோட கதவைத் தடார்னு சாத்திக்கிறா. மடக்கற விதந்தான் தெரியல்ல.'' தவசி கெக்கலித்தான்.

''ஒரு பொண்ணு மேலே ஆசையை வெச்சுட்டு அந்த ஆசைத் தீயை மனசுல சுமந்துட்டு... வெறுமனே வெறுமனே அவளைப் பார்த்துக்கிட்டிருக்கிறதுல ஒரு பிரயோசனமும் இல்லேடா தவசி... அவளை எப்படியாவது மடக்கிடணும்!''

''எப்படி மடக்கிறது?''

''இப்போ பண்ணையார் வீட்டுக்கு வேலைக்குப் போயிருக்கிற செண்பகம் மத்தி

யானம் எத்தினி மணிக்கு இந்த வழியா வீட்டுக்குப் போவா?''

''மத்தியானம் ஒரு மணிக்கு!''

''சரி. இன்னிக்கு அவ இந்த வழியா வரட்டும். கபால்னு பாய்ஞ்சு அள்ளிக்கிட்டு மண்டபத்துக்குள்ள வந்துடலாம். கண்ணு எட்டின வரைக்கும் ஆளு அம்பு இல்லாத பொட்டக்காடு... என்ன சத்தம் போட்டா லும் யார் காதிலேயும் விழாது....''

காளிமுத்து சொல்ல, தவசி உற்சாகமாய் உள்ளங்கைகளை சூடு பறக்கத் தேய்த்துக் கொண்டான். மனசில் செண்பகத்தைத் தொடப் போகிற சந்தோஷம் ததும்பியது.

**பங்களாவில்**

**போ**ர்டிகோவில் கார் நிற்க, காருக்குள் பண்ணையார் உட்கார்ந்திருக்க, பண்ணையாரின் மனைவி சம்பூர்ணத்தம்மாள் கத்திக் கொண்டிருந்தாள். சக்கர நாற்காலியை உருட்டியபடி.



''இதோ பாருங்க! இப்பவே மணி பதினொன்னு ஆயிடுச்சு. நீங்க வாழைத் தோட்டத்து அய்யன் கோயிலுக்குப் போய்ச் சேர மணி எப்படியும் பனிரெண்டாயிடும். ஒரு பதினைஞ்சு நிமிஷத்திலே தெரிசனத்தை முடிச்சுக்கிட்டு உடனே புறப்பட்டாலும் ஒண்ணே கால் மணிக்கெல்லாம் இங்கே வந்துடலாம்....''

பண்ணையார் தணிகாசலம் தலையைக் கீறிக்கொண்டு அவஸ்தையோடு மனைவியைப் பார்த்தார். ''சம்பூர்ணம்... எனக்கு ஏன் தான் பிறந்த நாள் வருதோன்னு கவலையாயிருக்கு. பிறந்த நாள் வந்தாலே போதும். அந்தக் கோயிலுக்குப் போ இந்தக் கோயிலுக்குப் போன்னு வெரட்றே! போன வருஷம் வேகாத வெய்யில்ல மருதமலைக்கு போகச் சொன்னே... இந்த வருஷம் சோமனூர்ல இருக்கிற வாழைத் தோட்டத்து அய்யன் கோயிலுக்குப் போகச் சொல்றே. சை!''

சக்கர நாற்காலியை உருட்டியபடி அவரை நெருங்கினாள் சம்பூர்ணத்தம்மாள். குரல் நெகிழ்ந்திருந்தது. ''கோயிலுக்குப் போறப்ப முழு மனசோட போகணும். என்னோட காலு ரெண்டும் சுவாதீனமில்லாமப் போனதால்தான் உங்களையாவது கோயிலுக்குப் போயிட்டு வரச் சொல்றேன். நான் நடக்கிற மாதிரி இருந்தா உங்களைத் தொந்தரவுபடுத்த மாட்டேன். இந்த வருஷம் மட்டும் வாழைத் தோட்டத்து அய்யன் கோயிலுக்குப் போய் விட்டு வந்துருங்க போதும்!''

தணிகாசலம் முகத்தைச் சுளித்தார். ''எவனோ ஒரு ஜோசியன் எனக்கு விஷ

தோஷம் இருக்குன்னு சொன்னதை நம்பி அதுக்குப் பரிகாரமா வெள்ளியாலே செஞ்ச ரெண்டு பல்லியை அய்யன் கோயில்ல குடுக்கச் சொன்னியே... அதை யார் கிட்டக் குடுக்கிறது? பூசாரிகிட்டயா?'' எரிந்து விழுந்தார்.

''அங்கே யாரும் பூசாரி இருக்க மாட்டாங்க. நீங்களேதான் புற்றுமண்ணுக்கு பூசையைப் பண்ணி அந்தத் திருமண்ணைப் பிரசாதமா எடுத்துட்டு வரணும்.... அந்த வெள்ளில செஞ்ச ரெண்டு பல்லியையும் உண்டியல்ல போட்டுடுங்க.''

''சரி...சரி....'' காரைக் கிளப்பினார் தணிகாசலம். கார் மறையும் வரை பார்த்துக் கொண்டிருந்த சம்பூர்ணத்தம்மாள் பங்களாவின் உட் பக்கமாய்த் திரும்பிக் கத்தினாள்.

''செண்பகம்! ஒரு மணிக்கெல்லாம் சாப்பிட வந்துருவாரு. அதுக்குள்ளே சமையலை முடிச்சுடு... பால் பாயசத்திலே சர்க்கரை கொஞ்சம் கம்மியாவே இருக்கட்டும்.''

''சரிங்கம்மா!''

செண்பகம் உள்ளே போனாள் சமையலைக் கவனிக்க.

### மண்டபத்தில்

வயிற்றில் வார்த்துக் கொண்ட சாராயம் கபகபவென்று குடல் பாதைகளில் சுற்றி வர மண்டபத்துத் தூணோரமாய் சாய்ந்து நின்றபடி காத்திருந்தார்கள் காளிமுத்துவும் தவசியும்.

''என்னடா தவசி? மணி ரெண்டாகப் போவுது.... அவனேயே இன்னும் காணோம். நாம சாராயம் குடிக்கப் போன நேரத்துல குடிசைக்குப் போயிருப்பானோ?''

''வந்துருவா... எப்படியும் இந்த வழியாத்தானே குடிசைக்குப் போயாகணும்!'' தவசி பீடியொன்றை வாயில் பொருத்திக் கொண்டான்.

### பங்களாவில்

சுவர்க் கடிகாரம் 2.30ஐக் காட்ட, சம்பூர்ணத்தம்மாள் கோபமாய்ச் சக்கர நாற்காலியை உருட்டிக் கொண்டு உள்ளுக்கும், வரவேற்பறைக்கும் அலைந்து கொண்டிருந்தாள்.

''ஆறுமுகம் சினிமா போனான். பாதியிலே திரும்பினான். அவன் பார்த்த சினிமா எது?''

''மூன்று முகம்!'' யெஸ். ஜீ.



செண்பகம் கதவோரமாக நின்றிருந்தாள்.

''எனக்கு அப்பவே தெரியும். அந்த மனுஷன் கோயிலுக்குப் போயிட்டு நேரா வீட்டுக்கு வர மாட்டாருன்னு... அப்படியே கிளப்புக்குப் போய் சீட்டாடிட்டுத்தான் வருவார். பரம்பரை பரம்பரையா இருக்கிற இந்தக் குணம் மாறிடவா போகுது!''

சம்பூர்ணத்தம்மாள் கோபத்தில் வார்த்தைகளை வெடிக்க செண்பகம் மெல்ல நடந்து முன்னே வந்தாள். ''அம்மா கிளப்புக்குப் போன் பண்ணி அய்யா அங்கே இருக்காரான்னு ஒரு வார்த்தை கேட்டுப் பாருங்கம்மா!''

சம்பூர்ணத்தம்மாள் செண்பகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். ''உனக்கு அவரைப் பத்தி சரியாத் தெரியாதுடி செண்பகம். மனுஷன் கிளப்புல இருந்தாலும் நாம் போன் பண்ணிக் கேட்டா இல்லேன்னு சொல்லச் சொல்லியிருக்கார்.... நேராப் போனா கையும் களவுமாய்ப் பிடிக்கலாம். ஆனா நான் போற மாதிரியா இருக்கேன்! காலையில எந்திரிச்சதும் படிச்சுப் படிச்சுச் சொன்னேன். உங்க பிறந்த நாளுக்காக நிறைய திட்டம் பண்ணப் போறேன்னு. சரி சரின்னு தலையைத் தலையை ஆட்டிட்டுப் போன மனுஷனை இன்னமும் காணோமே... மணி ரெண்டே முக்கா ஆகப் போகுதே!''

''அம்மா செஞ்சு வெச்சதெல்லாம் ஆறி அவலாப் போகுதம்மா... நீங்களாவது சாப்பிட வாங்கம்மா''—செண்பகம் அழைத்தாள்.

சம்பூர்ணத்தம்மாளை ஆவேசம் பற்றிக் கொண்டது. ''எனக்கு ஒண்ணும் வேண்டாம். பொறந்த நாளும் அதுவுமா அந்த மனுஷனே வந்து கையை நனைக்காதபோது எனக்கு மட்டும் கொட்டிக்கவா பிடிக்கும்? டீ....செண்பகம்...செஞ்சு வச்ச பதார்த்தம் பூராவையும் நீ எடுத்துக்கிட்டுப் போய் உன்னோட குழந்தைகளுக்குப் பரிமாறி நீயும் சாப்பிடு போ!''

பசியை வயிற்றிலும், ஏக்கத்தைக் கண்களிலும் வைத்துக் கொண்டு தனக்காகக் காத்திருக்கும் பிஞ்சுகளின் நினைவு மனசை உக்கிரமாய்த் தாக்க—

நடையை எட்டிப் போட்டு—

வேகமாய் நடக்க ஆரம்பித்தாள்.

### குடிசையில்

''என்ன பாப்பாத்தி உங்கம்மா இன்னும் பண்ணையார் வீட்டு வேலை முடிஞ்சு வரலையா?'' — எதிர்க் குடிசையில் இருந்த பாக்கியம் கேட்டாள்.

''இன்னும் இல்லேக்கா!'' — பாலுவை மடியில் கிடத்திக் கொண்டு கன்னத்துக்கு கை முட்டுக் கொடுத்தபடி குடிசையின் வாசலில் உட்கார்ந்திருந்த பாப்பாத்தி மெல்லிய குரலில் முனகினாள். பாலு பசி மயக்கத்தில் கண்களை மூடியிருந்தான்.

''சரி... உங்கம்மா வர்றப்ப வரட்டும். நம்ம குடிசைக்கு வா... நீயும் தம்பியும் சாப்பிடுவீங்களாம்....''

பாப்பாத்தியும் பாலுவும் சாப்பிட எழுந்தார்கள்.




# Hallmark SUPER

## ஜப்பானிய தொழில் நுட்பத்தோடு தயாரிக்கப்பட்ட மிக நவீனமான மூன்று பர்னர்கள் கொண்ட ஹால்மார்க் எவர்சில்வர் கியாஸ் ஸ்டவ்.

- வெளியே எடுத்துச் சுத்தம் செய்யக் கூடிய எவர்சில்வர் தட்டுகள்
- பாத்திரங்களை வைக்க இறக்குமதி செய்யப்பட்ட ஸ்டீலால் உருவாக்கப்பட்ட தாங்கிகள்
- ரப்பர் கால்கள் - தனியாக ஸ்டாண்ட் தேவையில்லை
- கியாஸை சேமிக்கும் பிரத்யேகமாக வார்க்கப்பட்ட பர்னர்கள்
- வெகுநேரம் சமையல் செய்தாலும் சூடேறாத வடிவமைப்பு
- மிதமான சூட்டிற்கும், ஆறிய சமையலைச் சுட வைக்கவும் மூன்றாவது பர்னர்.



தயாரிப்பாளர்கள் :
ஓரியண்டல் அப்ளையன்ஸஸ் பி.லிட்.
சென்னை-600 013




விற்பனையாளர்கள் :
நிஸ்ச்சா-தீப் எண்டர்பிரைசஸ்
8, விக்டோரியா கிரஸண்ட்
எழும்பூர், சென்னை 600 105
போன் : 811403

242, எஸ். என். லேஅவுட்
கிராஸ் கட் ரோடு அருகில்
கோயம்புத்தூர்-641 012.

கிளைகள்-பெங்களூர், ஹைதராபாத் மற்றும் விஜயவாடா




இல்லத்திற்கேற்ற உபகரணங்களில் உயர்ந்த அந்தஸ்து பெற்றது !

Sista's-NDE. 86.82. T.M.A



"தன் கல்யாணத்திற்கு அப்புறம் எடைக்கு எடை ராகமாலிகா புடவை இந்த கோவிலுக்கு கொடுக்கிறதா வேண்டிக்கிட்டு இருந்தாங்களாம்"

"அவங்க எடைக்கு ராகமாலிகா பட்டு புடவை தான் தாங்கும்"

**ராகமாலிகா பட்டு சேலைகள்**

சுகன் ஆர்கேட் — பானகல் பார்க் அருகில்
ராஜேஸ்வரராவ் ரோடு, தி. நகர்,
சென்னை-600017

(ஞாயிறு கடை உண்டு)

# பழனியில் சிகிச்சை



**பெறுங்கள் இதுவரை நீங்கள் கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுக வாழ்வு பெறலாம், வருக!**

பிரபல உலகப் புகழ் வைத்திய மன்னன்

## Dr. S. காளிமுத்து,

R.M.P., (IND), V.V.C., A.M.I.H., R.A.M., P.R.H.M.P.,

அவர்களை பழனியில் 23-ந் தேதி முதல் 31ந்தேதி வரை அவர் தலைமை அலுவலகமான பழனி டவுன் பழைய தாராபுரம் ரோட்டில் உள்ள பழனி சித்தர் வைத்தியசாலை (Regd)யில் காலை 10 மணி முதல் பகல் 12 மணி வரை, மாலை 4 மணி முதல் 6 மணி வரையிலும் நேரில் வந்திருந்து ஆலோசனையுடன் எல்லா வியாதிகளுக்கும் சிகிச்சையும் மருந்துகளும் பெறலாம்.

நீங்கள் கவலைப்படும் பிரச்சினையான தாம்பத்திய வாழ்வில் குறைபாடு, சோர்வு, வீரிய குறைவு, குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை, நரம்பு துவளல், தேக உறுப்புக்கள் மெலிவு, குழந்தை செல்வம் இல்லாமை, அணுக்கள் குறைவு, வெட்கம், நடுக்கம், இருமல், கபம், தும்மல், வாதநோய், வாய்வு, வயிற்றுவலி, உள்-வெளி ரத்த நவமூல வியாதிகள், குடல் புண், வாந்தி மற்றும் இதில் கூறப்படா நோய்களுக்கும் 86 வருட அனுபவ மருந்துகளும் ஆலோசனையும் நேரில் டாக்டரிடம் பெற்று சுகமடைய அழைக்கிறோம். வணக்கம்.

**பழனி சித்தர் வைத்தியசாலை (Regd.) பழனி-624601**

போன்: 316, 316எ, ★ வீடு: 420 ★ தந்தி: சித்தர்

## மண்டபத்தில்

தவசி கத்தினன்.

''காளிமுத்து அங்கே பாத்தியா...? செண்பகம் வர்ரு!'' காளிமுத்து பார்வையை உயர்த்த — செண்பகம் தலையிலும் இடுப்பிலும் வைக்கப்பட்ட பாத்திரங்களோடு வேக வேகமாய் வந்து கொண்டிருந்தாள்.

''அம்மாடி!.... வர்ரு....வர்ரு... தவசி! இந்தா துண்டு... செண்பகத்தோட வாயை 'கப்'ன்னு பொத்திக் கட்டு... நான் மத்ததைப் பார்த்துக்கறேன்....''

இருவரும் தயாரானூர்கள்.

செண்பகம் மண்டபத்தை நெருங்கிக் கொண்டிருந்தாள்.

## பங்களாவில்

போர்டிகோவில் கார் வந்து நின்றது.

தணிகாசலம் இறங்கினர்.

முன்புற அறையில் சக்கர நாற்காலியில் இருந்த சம்பூர்ணத்தம்மாள் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். ''சம்பூர்ணம்!'' அழைத்துக் கொண்டே அவளை நெருங்கினர்.

''என்கிட்டப் பேசாதிங்க...''

''என்ன சம்பூர்ணம் கோபமா?''

''......''

''இதோ பார் சம்பூர்ணம்... என்மேல கோபப்பட்டு ஒரு பிரயோசனமும் இல்லே. கோயில்ல ஏகப்பட்ட கூட்டம். இன்னிக்கு ஏதோ விசேஷ நாளாம். பெரிய க்யூ நின்னுட்டிருந்தது. ஸ்பெஷல் கட்டணம் செலுத்தி உள்ளே போறதுக்கும் அந்தக் கோயில்ல வசதி யில்ல... வேறு வழியில்லாம ரெண்டு மணி நேரம் க்யூவில் நின்னு புற்றுக்குப் பூசை பண்ணித் திருமண் எடுத்துட்டு வந்தேன். நீ சொன்ன மாதிரியே வெள்ளியால செஞ்ச ரெண்டு பல்லியையும் உண்டியல்ல போட்டுட்டேன்.''

சம்பூர்ணம் அவரை ஏறிட்டாள்.

பட்டுச் சட்டையில் அங்கங்கே தெரிந்த திருமண் தீற்றல்களும், களைத்துப் போன அவர் முகமும் — அவர் பொய் சொல்லவில்லை என்பதை உணர்த்தின. மன்னிப்புக் கோரி நடந்ததை விவரித்து தோட்டக்காரச் சின்னுவை அனுப்பி ஹோட்டல் காரியர் சாப்பாட்டை எடுத்துட்டு வரச் சொன்னுள்.

## மண்டபத்தில்

செண்பகத்தின் வாயில் துணிப் பந்து செவ்வியிருக்க, கைகள் பின்னுல் மடக்கப்பட்டு துண்டால் கட்டப்பட்டிருந்தன. விழிகளில் பீதி நெளியப் புரண்டாள்.

''உடம்பை ரொம்பவும் அலட்டிக்காதே செண்பகம்!'' — தவசி அசிங்கமாய்ச் சிரித்தான்.

''தவசி! மொதல்ல சாப்பாட்டை முடிச்சுக்குவோம். பண்ணையார் வூட்டு சாப்பாடு கம்மா கமகமங்குது. வயிறு நிறைஞ்சாத்தான் செண்பகத்தோட அழகு கண்ணுக்கு பளிச்சின்னு தெரியும். ஒவ்வொரு பாத்திரமா எடு...''



மனைவி: பட்டுச் சேலை எடுக்கும்போதே பெரிய அகலக் கரையா எடுங்கன்னு சொன்னேனே கேட்டீர்களா?

கணவன்: ஏன்...? இப்ப என்ன...?

மனைவி: பாத்திரக்காரன் சின்னப் பாத்திரம்தான் தருவேன்னு சொல்றுன்.

எஸ். மாரியப்பன்

---

பத்தே நிமிஷம். பாத்திரங்கள் பூராவும் காலி.

இருவரும் எழுந்தார்கள். ''வாடா தவசி இனிமே செண்பகத்தைக் கவனிக்கலாம். நீ தலைப் பக்கமா உக்காரு... நான் கால் பக்கமா உக்கார்றேன்....''

செண்பகத்தை நோக்கி இரண்டடி எடுத்து வைப்பதற்குள் சுடு பட்ட பாலிதீன் பேப்பராய்க் கீழே சுருண்டார்கள். ஒரே சமயத்தில் இருவரும் நெஞ்சைப் பிடித்துக் கொண்டு புரண்டார்கள்.

''அம்...மா....ஆ!''

திகிலில் உறைந்து போயிருந்த செண்பகம் கஷ்டப்பட்டுத் தலையை உயர்த்திப் பார்த்தாள்.

இருவரும் வாயில் நுரை தள்ள — வலிப்பு வந்தவர்களைப் போல் கைகளையும் கால்களையும் உதறிக் கொண்டிருந்தார்கள்.

ஐந்தே நிமிஷம்தான் அந்த உதறல்.

மெல்ல மெல்ல அடங்கினர்கள்.

செண்பகம் மெல்ல மெல்ல உடம்பை அசைத்து அசைத்துப் புரண்டாள். மண்டபத்தைத் தாண்டி வெளியே வந்துவிட்டால் போதும். யார் கண்ணிலாவது பட்டுவிடலாம். என்ன ஆயிற்று அவர்களுக்கு?

யோசித்துக் கொண்டே — வாசலை நோக்கி அங்குலம் அங்குலமாக நகர்ந்தவளின் பார்வையில் அந்தப் பாத்திரம் சிக்கியது. பால் பாயசப் பாத்திரம். தவசியும் காளிமுத்துவும் குடித்தது போக மீதமிருந்த அந்த கொஞ்ச நஞ்ச பாயசத்தில் நீள நீளமாய்— கறுப்பாய் ஏதோ தெரிந்தது.

அருகில் புரண்டு பார்வையை உன்னிப்பாக்கிப் பார்த்தாள்.

உடம்பு 'ஜிவ்' என்றது.

மூன்றங்குல நீளத்தில் இரண்டு மரப் பல்லிகள் கொத கொதவென்று உப்பிய உடம்போடு தெரிந்தன.

# இந்திய ஆட்டக்காரர்களைக் கண்டாலே ஆகாதோ?

● என். டி. ஆரின் நிறைகளையும் குறைகளையும் சீர்தூக்கிப் பார்த்து நேர்மையானதொரு 'டூ இன் ஒன்' தலையங்கம் எழுதி விட்டீர். கன்கிராட்ஸ்.
ஸ்ரீரங்கம் — ஆர். கோபாலன்

● பாரத யாத்திரையில் ஒரு நாள் கட்டுரையில் ''தன்னைத் தலைவன் என்று தனிமைப்படுத்திக் கொள்ளாமல் மக்களோடு மக்களாகப்பழகுகிறார் சந்திரசேகர்'' என்ற வரிகள் உண்மையான மக்கள் தலைவன் அவர்தான் என்பதைத் தெளிவாக்கியது. இந்த நாட்டு மக்கள் அவரைப் புரிந்து கொள்ளட்டும்.
பூந்தமல்லி — தேசாய் தாசன்

● செய்தி சிறிதாக இருந்தாலும் ''சில்பிக்கு ஒரு சோதனை'' என்ற கனமான பகுதியை வெளியிட்டு மறைந்த திரு சில்பிக்கு அஞ்சலி செலுத்தி விட்டீர்களே!
புதுவை — அரு அழ. அண்ணாமலை

● தொழிற் கல்வியையும், கலைக் கல்வியையும் இணைத்து நறுக்குத் தெறித்தாற்போல் கருத்துத் தெரிவித்த டாக்டர் மித்ரா ஜி. அகஸ்டின் போன்ற கல்வியாளர்களைக் கலந்து கல்விச் சீர்திருத்தம் செய்தால் கந்தத் திருத்தங்கள் செம்மையாக அமையும்.
திருச்சி — டி. ஆர். அலமேலு

● நாகரீகத்தில் திளைக்கும் பெண்களுக்கு புத்தி சொன்ன 'ஒப்பனை' அப்பெண்கள் பண்போடு நடக்கவும் வழி காட்டியது!
பூவிருந்தவல்லி — கு.ப. இரகுநாதன்

● ''நிஜ மௌனம் எப்படி!'' என்று ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகளின் அருள் வாக்குளன்னை மெய்சிலிர்க்க வைத்துவிட்டது.
அதிராம்பட்டினம் — த. செல்வராஜன்

● இந்திய ஆட்டக்காரர்களைக் கண்டாலே ஆகாதோ? பின்னே என்ன? 17 வயது 193நாட்களில் டெஸ்ட் கிரிக்கெட்டுக்கு வந்துவிட்ட மனீந்தர் சிங்கைப் பற்றி எதுவும் குறிப்பிடவில்லை. அதே போல் தொடர்ந்தாற்போல் 86 டெஸ்ட்கள் விளையாடி சாதனை புரிந்திருக்கும் விஸ்வநாத்தைப் பற்றியும் ஒன்றும் குறிப்பிடவில்லை.
திருச்சி-5 — இரா. மு. குமார்

● கல் மேல் எழுத்து போன்ற நல்ல மனிதாபிமான உணர்ச்சிகளுடன் கூடிய கவிதைகளை வெளியிடுவதன் மூலம் உண்மையிலேயே பெருமை சேர்த்துக் கொள்கிறீர்கள்.
கண்ணமங்கலம் — அ. ஜா. ராஜசேகரன்

● பட்டினத்தார் கிரிக்கெட்டில் '99' ரன்களில் அவுட்டாகி சாதனை புரிந்ததைப் பற்றி சிறப்பாகக் குறிப்பிட்டிருந்தார். எனினும் அவர் 'செஞ்சுரி'யை ஒரு 'ரன்'னில் கோட்டை விட்டார். ஒரு 'சுவையான தகவலைக் குறிப்பிட்டிருந்தால் கட்டுரை முழுமை பெற்றிருக்கும். உலகிலேயே ஒரே ஒரு கிரிக்கெட் வீரர்தான் 99 ரன்களில் 'நாட் அவுட்' ஆகத் திகழ்ந்தார். இங்கிலாந்து வீரர் ஜியாஃப் பாய்காட், 1979-80 சீரிஸில் ஆஸி அணியுடன் 'பெர்த்'தில் விளையாடும்போது ஆட்டத்தைத் துவக்கி இன்னிங்க்ஸ் முடியும்வரை நின்று 99ல் நாட் அவுட் ஆகித் தனிப் பெருமை பெற்றார்.
கல்கத்தா — வி. பாலசந்திரன்

● அண்மையில் தேசிய ஜோதிஷ கருத்தரங்கு' ஒன்று நடந்தது.

பின்பு இந்தியன் எக்ஸ்பிரஸ் 30–12–82 இதழில் ஜோதிஷத்தின் குறைபாடுகளையும், அதில் கவனம் செலுத்துவது எங்ஙனம் தனி மனிதனின் உற்சாகத்தையும் ஊக்கத்தையும் பாழாக்கும் என்பதை விளக்கியும் ஒரு தலையங்கம் வெளியாகியிருந்தது. இத்தலையங்கத்துக்குப் பதில் கூறும் வகையிலும், ஜோதிஷத்தின் சிறப்பம்சங்களை நிலைநாட்டும் வகையிலும் பி. வி. ராமன் ஒரு நெடிய கட்டுரை எழுதியிருந்தார். இதுவும் இந்தியன் எக்ஸ்பிரஸ் 20–1–83 இதழில் பிரசுரமாகியிருந்தது. அத்துடன் அன்றே, முந்தின (30–12–82) தலையங்கத்தை வலியுறுத்தி மேலும் ஒரு தலையங்கமும் பிரசுரமாகியிருந்தது.

இவைகளைப் படிக்கும்போது ஏறத்தாழ 30 ஆண்டுகளுக்கு முன்பே 'கல்கி'யில் ஜோதிஷத்துக்கு ஆதரவாயும் எதிர்ப்பாயும் வாசகர் கடிதங்கள்பல வாரங்கள் தொடர்ந்து பிரசுரமானதும் இறுதியில் ராஜாஜி அவர்களின் சிறுகதை ஒன்றை வெளியிட்டு அத்துடன் விவாதம் முற்றுப் பெற்றதும் நினைவு வருகின்றது.
சோழவந்தான் — எஸ். நாராயணன்

வட்ட மேஜை

# 'வீடியோ' வரை காத்திரு! 6

கதை: ஜே.எஸ்.ராகவன் சித்திரம்: செல்லம்

ஏர்லங்கா விமானம் சென்னையை விட்டுக் கிளம்புகிறது. ஜூஜியும், நண்பிகளும் ஜோடியாக இருக்கிறார்கள்.

ஆய்புலான்!... நீங்கல் இப்யா ஜூது கொழும்பு செல்லும் விமானத்தில் இருக்கிறீர்கள்.....

ஆஹா! இழுக்கி றேம்... ஆய்புலான்கு என்ன சொந்தம்டி?

சிங்களத்திலே வணக்கம்னு அர்த்தம்! மிஸ்!

ஹாய்! பின் சீட்டில் ஒருநட்... காஷூநட் முந்திரிக் கொட்டை.

கரெக்ட்! நான் முந்திரி வியாபாரம் நான் செய்கிறேன்.

கஷ்டம்! கஷ்டம்! ஷோபா, ஸ்ரீலங்காலே எந்த இடமெல்லாம் பாக்கணும்?

கண்டி, கதிர்காமம், அனுராதபுரா, நுவரெலியா, கொழும்பு யாவில் உள்ள "டூட்டி ஃப்ரீஷாப்"...

மிஸ்டர்! எங்களோடு தனியா கொஞ்சம் பேச விடறீங்களா?

ஓ... ஷ்யூர். பேசுங்கோ ...பேசுங்கோ... என்னுடைய ஒலிபரப்பை இத்துடன் முடித்து விடுகிறேன் ஆய்புலான்!

விமானத்தின் பின் புறத்திலிருந்து யோகேஷ் வருகிறான்.

ஹாய் ஜூஜி!!

மை காட்!







ராஜியை முறைத்து விட்டு தன் சீட்டுக்குப் போகிறான். ஒரு மணி நேரத்தில் விமானம் கொழும்பு, கடுநாயகா ஏர்போர்ட்டில் வட்டமிட்டு இறங்குகிறது.









''உங்கள் செல்வங்களின் ஒளி மயமான எதிர்காலத்திற்கு நாங்கள் அமைத்துத் தரும் பூமயமான புதுப்பாதை...''

எங்களது சேமிப்புத் திட்டங்கள் தேவைகளுக்கேற்ப வாழ்வை அமைத்துக் கொள்ள உதவும் என்பதற்கு ஒரு சிறந்த உதாரணம் ''வளர்நிதி'' சேமிப்புத் திட்டம்.

இதில் உங்களது முதலீடு 84 மாதங்களில் இரு மடங்காகப் பெருகி உங்கள் குழந்தைகளின் அவசியத் தேவைகளுக்குப் பயன்படுகிறது.

தேவைகளை அறிந்து திட்டங்களை அறிமுகப்படுத்தும்



**பாங்க் ஆப் தமிழ்நாடு லிட்**

(ஒரு ஷெட்யூல்ட் பாங்க், ஸ்தாபிதம் 1903)

62, கீழரத வீதி, திருநெல்வேலி டவுன்.

*உங்களுக்காகவே நாங்கள்*

EP-BT-102-82

# வரலாறு படைக்கும் வரலாற்று நூல்



பேட்டிக்கு வந்திருப்பதாகத் தெரிவித்ததும், டிவியில் கிரிக்கெட் மாட்ச் பார்த்துக் கொண்டிருந்த தலைவர் ம. பொ. சி தமது அறையில் எங்களை வரவேற்றார். தமது 77வது பிறந்த நாளில் * 'விடுதலைப் போரில் தமிழகம்' என்ற ஆயிரம் பக்கங்கள் கொண்ட மிகப்பெரிய வரலாற்று நூலை எழுதி வெளியிட்ட தலைவரை சந்தித்துப் பேசினோம். சுமார் மூன்று மணி நேரத்துக்கு நீடித்த பேட்டியிலிருந்து சில பகுதிகள் :

இந்த நூலை எழுதும்போது உங்கள் நினைப்பு, உணர்ச்சி எப்படி இருந்தன?

சுதந்திரப் போராட்டத்தில் நேரில் கலந்து கொண்டதனால், என் சுய சரிதையையே எழுதுகிற உணர்ச்சி இருந்தது எனக்கு. பழைய இலக்கியங்களில் ஒரு மரபு உண்டு. கவிஞன் களத்தில் இருந்து கொண்டே போரைப் பார்த்துப் பாடுவது. களத்தில் பரணில் இருந்துகொண்டு பாடுவான் கவிஞன். அதே உணர்வுதான் எனக்கும் இருந்தது. தேசியப்பற்றை உணர்த்துவதற்காகவே எழுத வேண்டும் என்ற நினைப்போடு, 'நாமே எழுதி விடுவோம்' என்று எழுதினேன்.

இந்த நூலைத் தொகுத்து எழுதத் தீர்மானித்த உங்கள் அடிப்படை நோக்கம் என்ன?

முதல் காரணம், நமது அடுத்த தலைமுறையினருக்கு நாட்டு விடுதலைப் போரின் உண்மையான சரித்திரம் தெரிந்திருக்கவேண்டாமா என்ற ஆதங்கம். அதிலும் தமிழகம் ஆற்றிய பங்கை முறையாக எடுத்துச் சொல்ல வேண்டிய கடமை உணர்ச்சி. விடுதலைப் போராட்டத்தில் தமிழர் ஆற்றியுள்ள பங்கை எழுதி வெளியிட, தமிழகத்தில் இயங்கிய காங்கிரஸ் அரசே தவறிவிட்டதை நினைக்கும் போதெல்லாம் என் மனசு வேதனைப் பட்டிருக்கிறது.

1957ல் சுதந்திரப் போரின் நூற்றாண்டை ஒட்டி வெளியிடப்பட்ட திரைப்படம் ஒன்றில் தமிழகத்தின் பங்கு காண்பிக்கப்படவேயில்லை. ஏன், பட்டாபி சீதாராமையா எழுதிய காங்கிரஸ் வரலாற்றில் கூட, தென்னகம் இருட்டடிப்புச் செய்யப் பட்டிருந்தது. மாறாக, 'தெற்கு உறங்கிக் கிடந்தது. தெற்கு கைகொடுத்திருந்தால் சுதந்திரம் இன்னும் முன்னாலேயே கிடைத்திருக்கும்' என்பது போன்ற குற்றச்சாட்டுக்கள் கூட வடக்கேயிருந்த சில தலைவர்கள் வாயிலிருந்து வந்தன. கர்நாடக அரசும், கேரள அரசும் தயாரித்த புத்தகங்களில் இக்குற்றச்சாட்டை மறுத்து எழுதியிருக்கின்றனர் என்பது மட்டுமல்ல, தைரியமாகக் கண்டித்தும் இருக்கிறார்கள்.

1972ல், மத்தியில் ஒரு கமிட்டி கூடி, தேச விடுதலைப் போராட்ட வரலாற்று நூல் ஒன்றைத் தயாரிக்க முடிவெடுத்தது. ஆனால் என்ன காரணமோ அப்படி ஒன்றை உருவாக்க இயலாது போயிற்று. பிறகு ஒவ்வொரு மாநிலமும் தத்தம் வரலாற்று நூலை எழுதி வெளியிட வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அப்புறம், தேச முழுமைக்குமான ஆதார பூர்வமான நூலைத் தயாரிப்பது எளிது என்று முடிவெடுத்தது. அது எப்படியோ போகட்டும். ஒரு பல்கலைக் கழகமோ அல்லது அரசாங்கமோ செய்திருக்க வேண்டிய, செய்யாது விட்ட பணியை, நான் என்னால் இயன்றவரை செய்திருக்கிறேன்.

இந்த நூலை எழுதியிருக்கவில்லை என்றால் ஒரு மிகப் பெரிய பொறுப்பைச் செய்யாது விட்ட குற்றத்தை நீங்கள் உணர்ந்திருப்பீர்களா? அல்லது ஒன்றும் கெட்டுப்போய் விடவில்லை என்று நினைத்துச் சமாதானப் பட்டிருப்பீர்களா?

நிச்சயமாக வருத்தப் பட்டிருப்பேன். இந்த நூலை எழுதி முடிப்பதில் எனக்கு எத்தனையோ சங்கடங்கள் இருந்தன. இந்த விஷயத்தில் எனக்கு முன்னோடி நூல் இல்லை. நானே எழுதிய வீர பாண்டிய கட்டபொம்மன், கப்பலோட்டிய தமிழன் முதலிய வரலாறுகளும், சோமயாஜுலு எழுதிய திருநெல்வேலி சுதந்திரப் போராட்டம் போன்ற நூல்களும் மாவட்டச் சரித்திர நூல்களாக இருந்தனவே தவிர, விடுதலைப் போராட்டம் பற்றிய முழுச் சரித்திர நூல்களாக இருக்கவில்லை. அதனால் இதை எழுதுவதை ஒரு சவாலாகவே நினைத்துச் செயல்பட்டேன்; மிகப் பொறுப்புடன் எழுதி முடித்தேன்.

* பூங்கொடி பதிப்பகம் 14, சித்திரைக்குளம் மேற்கு வீதி, மயிலை, சென்னை-600004 விலை ரூ 100

இதை எழுதும்போது செய்திகள் திரட்ட என்னென்ன உதவிகள் கிடைத்தன — அரசிடமிருந்து, நூலகங்களிலிருந்து —வேறு தனிப்பட்ட நபர்களிடமிருந்து?

எனது நண்பர்கள் சிலர் மனமுவந்து ஒத்துழைத்தனர். செய்திகள் சேகரித்துத் தருவதில். தமிழ் நாட்டு சட்டமன்ற— மேலவை, பேரவை ஆகியவற்றின் குறிப்பேடுகள், நான் மேலவைத் தலைவர் என்ற முறையில் பார்வையிடக் கிடைத்தன. பல ஆங்கிலச் செய்திகளை என் நண்பர்மொழி பெயர்த்துத் தந்தார். (இந்த இடத்தில், தமக்கு இருந்த குறைந்தபட்ச ஆங்கில அறிவை வைத்துத் தாம் செயல்பட நேரிட்டது என்று சொன்னார் ம. பொ. சி. ஆனால் அவர் உபயோகித்த ஆங்கிலச் சொற்றொடர்களும் அநாயாசமாக அவர் உதிர்த்த ஆங்கிலப் பதப் பிரயோகங்களும், அவர் தமது அடக்கம் காரணமாகவே தெரிவித்தார் என்பதைப் புரிய வைத்தன.) தினசரிகளிலிருந்து செய்திகளைச் சேகரிப்பதில் சிரமம் இருந்தது. கிளர்ச்சிகள்பற்றியோ, போராட்டச் செய்திகளையோ தலைவர்களின் உரைகளையோ அந்நாளில் பத்திரிகைகள் வெளியிட முடியாது.

இதை எழுத ஆரம்பித்த பிறகு, ராஜாஜி முதலிய தலைவர்களும் இல்லை. (இருக்கிற ஒன்றிரண்டு பேரிடமும் தகவல்களைச் சரி பார்க்கச் சென்றபோது, கௌரவம் காரணமாக, உண்மைச் செய்திகளைக் கூட, ஆதாரம் தெரிந்திருந்தும் தெளிவாக்கத் தயங்கியதை ம. பொ. சி. குறிப்பிட்டார்.)

இந்தியச் சட்டசபைத் தேர்தலில் இங்கு எல்லாத் தொகுதிகளிலும் காங்கிரஸ் கட்சி ஜெயித்தபோது, 'இந்தியப் பெருநாடு முழுவதுமே சென்னை மாகாண வாக்காளர்களின் தேச பக்தியை மெச்சியது. பத்திரிகைகள் எல்லாம் பாராட்டுத் தெரிவித்தன. ஜஸ்டிஸ் கட்சி அதுவரை வளர்த்து வந்த வகுப்புவாதமானது, பொய்யாய், கனவாய், பழங்கதையாய்ப் போய் விட்டது!' என்று நீதிக் கட்சி, முஸ்லிம் லீக் பற்றி யெல்லாம் வருகிற பொழுது, உண்மையான செய்திகளை அப்படியே, கொஞ்சமும் திரித்து விடாமல், எழுதியிருப்பது பாரபட்சமில்லாமல் இருக்கிறது — என்று தெரிவித்தோம்.

''இது ஆதார பூர்வமான சுதந்திரப் போராட்ட நூல். வரும் தலைமுறையினருக்கு உண்மையை எடுத்துச் சொல்லும் நூல் என்ற நோக்கத்தில் எழுதியதால் அவை உண்மையான விமர்சனமாகவே இருக்கும். சுதந்திர போராட்டத்தில் முஸ்லிம் லீக் இரண்டாவது முன்னயாக — செகண்ட் ஃப்ரண்ட்ஆக செயல்பட்டது. அவர்களிடமிருந்து கோவாபரேஷன் கிடைத்தது. தே வேர் நாட் ப்ரோ—பிரிட்டிஷ்!'' என்றார் ம. பொ. சி.

தேர்தல் முடிந்ததும், 'ஜஸ்டிஸ் கட்சியை ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டோம்' என்று சத்தியமூர்த்தி பேசி வந்தார் கூட்டங்களில். அப்போது ராஜாஜி அவருக்கு எழுதிய கடிதம் ஒன்றில் — 'அடக்கத்தைக் கடைப்பிடிக்க வேண்டிய தருணம் இது. காங்கிரஸின் வெற்றி அதனை எதிர்த்துப் போட்டியிட்டவர்களுக்குஏற்பட்ட அவமானமாகாது. இதனைத் தாங்கள் தனிப்பட்ட பேச்சு வார்த்தைகளிலும், பொதுக் கூட்டங்களிலும் பேசும்போது வலியுறுத்தி வரவேண்டும்' என்று எழுதியிருக்கிறார்!

ஜனவரி '80ல் தொடங்கி, தொடர்ந்து இரண்டரை ஆண்டுகள் ம. பொ. சி. தமது 'செங்கோல்' இதழில் எழுதினார், இந்த வரலாற்று நூலை. இரவில் தூங்கப் போகும் போதுகூட அருகில் ஒரு நோட்டுப் புத்தகமும் பேனாவும் வைத்திருப்பாராம், விழிப்பு வரும் போது திடீரென்று உண்டாகும் சிந்தனைகளை உடனே எழுதி வைத்துவிட!

அதிக சிந்தனை இவரது உடல் நலத்தையும் பாதித்து, அல்சர் வந்து அவதிப்பட்டார். (''ஏன் அறுவைச் சிகிச்சையைத் தள்ளிப் போடுகிறீர்கள்? வயசானாலும் தொந்தரவு இல்லையா?'' என்று ராஜாஜி பல தடவை சொன்னதுண்டாம்.) அல்சருக்கு ஆபரேஷன் செய்து கொண்டார் 75 வயதில்!

சேகரித்ததகவல்களைச் சரிபார்த்து ஆதார பூர்வமானதுதானு என்று அறிந்த பிறகே எழுதி முடித்திருக்கிறார். ''ஒரு அவலை எடுக்க ஒரு கலம் உமியைச் சாப்பிட நேர்ந்திருக்கிறது ம. பொ. சி. அவர்களுக்கு!'' என்று கி. வா. ஜ. சொன்னாராம் பாராட்டாக, நூல் வெளியிட்ட அன்று.

ம. பொ. சி. தினமும் எழுதுகிறார். தினமும் படிக்கிறார். ரயிலில், காரில் செல்லும்போது நிறையப் படிப்பாராம். இதுவரை 124 நூல்கள் எழுதியிருக்கிறார்.

'எப்படியோ அரும்பாடுபட்டு, இந்த நூலை உருவாக்கி, தமிழின மக்களுக்குத் தந்துவிட்டதில் இமயத்தின் உச்சி மீது நிற்கிற பெருமிதம் ஏற்பட்டது' என்கிறார் தமது நூலின் முன்னுரையில். அவருடைய பெருமிதம் இருக்கட்டும், நமக்கே இந்த நூலைக் கையில் எடுக்கும்போது அப்படித்தான் இருக்கிறது!

**- சாருகேசி, தமயந்தி**

மேலட்டை வண்ணப்படம்: **உத்ரா**

---



மூளை ஆராய்ச்சியாளர்கள், உலகிலேயே பல இனத்தவர்களில் யூதர்களுக்குத்(Jews)தான் அதிக ஞாபக சக்தி உள்ளது என்று கண்டு பிடித்துள்ளனர்.
சராசரி மனிதனுக்கு சுமார் 45 வயதுவரை நினைவாற்றல் வளர்கிறது. பிறகு மெதுவாகத் தேயஆரம்பிக்கிறது. ஆனால் யூதர்களுக்கு 60 வயதுவரை நல்ல நினைவாற்றல் இருக்கிறது.

—குண்டன்

# அன்னை ஊட்டும் அமுதம்



✱ தாய் சேய் நலன் பகுதியில் ஆலோசனை பெற வரும் தாய்மார்கள்.

சத்துணவு சத்துணவு என்று எல்லோரும் இப்போது பேசுகிறார்களே, அந்தச்சத்துணவைப் பற்றி மேற்கு மாம்பலம் பப்ளிக் ஹெல்த் சென்டர் ஆரம்பக் காலத்துக்கு முன்பாகவே யோசித்திருக்கிறது.

சத்துணவின் செய்முறை:
(100 கிராம்கலவை)

| | | |
|---|---|---|
| கேழ்வரகு | 50 | கிராம் |
| கம்பு | 20 | கிராம் |
| பொட்டுக்கடலை | 30 | கிராம் |

எல்லாப் பொருட்களும் நன்கு சுத்தப் படுத்தப்படுகின்றன. கேழ்வரகும் கம்பும் 8 மணி நேரம் நீரில் ஊறவைக்கப்படுகிறது. பின் ஊறவைத்த கம்பும் கேழ்வரகும் வெயிலில் உலர்த்தப்படுகின்றன. இவை வறுக்கப்பட்டு, மாவாக்கப்பட்டு, மாவாக்கப்பட்ட பொட்டுக் கடலையையும் கலக்கிறார்கள். சத்துணவு தயார்!

மேலே சொன்ன கலவையில் தாய்மார்களுக்கும், குழந்தைகளுக்கும் தேவையான புரதச் சத்து உள்ளது.

குழந்தை பிறந்து சில மாதங்களானதும் பால் புகட்டினால் மட்டும் போதாது. திட பதார்த்தமும் சேர வேண்டும் என்கிறார்கள். இதற்காகப் பல கம்பெனிகள் பலவிதப் பெயர்களில் சத்துணவு தயாரித்து டப்பாவில் தருகின்றன. இவை விலை அதிகம். மேற்படி முறையில் குறைந்த விலையில் தாய்மார்கள் தாங்களே வீட்டில் தயாரிக்கலாம். கொஞ்சம் கொஞ்சமாகக் குழந்தைக்குச் சேர்த்துப் பழக்கப்படுத்தலாம்.

''இவ்வளவு சிரமப்படுவானேன் — பேசாமல் டின்னில் விற்கப்படும் குழந்தைகளுக்கான பால் உணவையும், சத்துணவையும் வாங்கிக் கொடுத்துவிடலாமே?'' என்று கேட்கத் தோன்றுகிறது.

அவ்வளவுதான். பப்ளிக் ஹெல்த் சென்டருடன் நெருங்கிய தொடர்பு கொண்ட பிரபல டாக்டர் விளாசித் தள்ளுகிறார்: ''நம் நாட்டில் சிறு குழந்தைகளின் இறப்பு விகிதம் அதிகம். அதற்கு முக்கிய காரணம் டயரியா. டயரியா வருவதற்கு மூல காரணம், டின்னில் அடைத்து விற்கப்படும் பால் உணவைத் தக்கபடி தயாரிக்காதது ஒன்று. சுத்தம் செய்யப்படாத ஃபீடிங் பாட்டில் மூலம் குழந்தைக்குப் புகட்டுவது இரண்டு. வெறுமனே வெந்நீரில் கரைத்துக் கொடுப்பதால் 'இன்ஃபெக்ஷன்' வர ஏதுவாகிறது. தொந்திரவு கம்மி என்பதற்காக, பீடிங் பாட்டிலைக் குழந்தையின் வாயில் வைத்து, தன்பாட்டுக்கு வேறு வேலையில் மூழ்குகிறார்களே சில தாய்மார்கள், அதுமகா தப்பு! நம்நாட்டுப் பழைய வழக்கங்கள் எவ்வளவோ நல்லது. தாய்ப்பால் தரமுடியவில்லை யென்றாலும் ஃபீடிங் பாட்டிலே வேண்டாம். பாலாடை அல்லது தம்ளரும் ஸ்பூனும் உபயோகப்படுத்தலாம்.''

தாய்ப்பாலின் நன்மைகளையும் அடுக்குகிறார்: ''இந்தத் தாய்ப்பாலுக்கு ஈடு இணை இல்லை. தாய்ப்பால் அருந்துகிற குழந்தைகளுக்கும் தாய்க்கும் நெருங்கிய தொடர்பு நிலவி சிசுவுக்கு ஒரு பாதுகாப்பு ஏற்படுகிறது. மேலும் அக்குழந்தைகளுக்கு 'கேரீஸ் டீத்' என்று சொல்லப்படுகிற பல் வியாதி வராது. அதிகப்படியான ஊளைச் சதையைக் குறைக்கவும், மறைமுகமாகக் குடும்பக் கட்டுப்பாட்டுக்கும் கூடத் தாய்மார்களுக்கு உதவுகிறது. குழந்தைகளுக்கு அதிகப்படியாக ஏற்படும் ஊளைச் சதை பின்னாட்களில் இருதய நோயில் கூடக் கொண்டு விடுமாம்!

நாலு சுவரோடு வீட்டுக்குள்ளேயே வளைய வரும் அம்மாமார்களுக்கு டாக்டர் சொல்கிற புத்திமதி சரி; ஆனால் நவீன யுகத்தில் வேலைக்குப் போகிற தாய்மார்களுக்கு?—

டயட்டீஷியன்களாகப் பணி புரியும் மகாலட்சுமியும், ரஞ்சனியும் இதற்குத் தயாராய்ப் 'பதில்' வைத்திருக்கிறார்கள்.

விடை :

உதடு

(பெயர்களை உச்சரித்துப் பாருங்கள்)

-நிரைஞானி

''கர்ப்பமான பெண்மணிகளுக்குத் தக்க யோசனை சொல்லிக் குறைந்த செலவில் ஊட்டமான உணவுக்கு வழி வகுக்கிறோம். வேலை செய்கிற பெண்மணிகளுக்கு மூன்று மாத லீவு உண்டே? குழந்தைக்கு மூன்று மாதம் ஆனவுடன் தாயின் வேலை நேரத்துக்குத் தக்கபடி பால் கொடுக்க ஆலோசனை அளிக்கிறோம். இடையில் பழ ஜூஸ், கொத்தின காய்கறி இவைகளைக் கொடுக்கலாம்.''

டாக்டர் சரஸ்வதி கூறுகிறார்: ''நம் ஊரில் குழந்தை பெற்ற தாயை ஒரு நோயாளியாகவே கருதுகிறார்கள். அது அவசியமே இல்லை. நார்மல் டயட் தாராளமாகக் கொடுக்கலாம்!''

ஆர். ரமா என்கிற தாய் சிரித்து உணர்ச்சியுடன் பேசினார்: ''குழந்தைக்குத் தாய்ப் பால் கொடுத்து வந்தேன். எக்ஸிமா வந்தவுடன் கொடுக்க இயலவில்லை. புட்டியில் புகட்டினேன். குழந்தைக்கு ஓயாமல் டயரியா! டாக்டர்களிடம் காண்பித்தும் பூரண குணம் இல்லை. இந்த ஹெல்த் சென்டருக்கு வந்ததும் இவர்கள் ஆலோசனைப்படி உணவுப் பழக்கத்தை மாற்றியமைத்தேன். இப்போது குழந்தை ஆரோக்கியத்துடன் இருக்கிறது.''

ஆஸ்பத்திரியைச் சுற்றி வருகிறோம். 'நந்தினி' (சத்துணவுக்கான பெயர்) தயார் செய்யப்படும் இடமும் சரி, நோயாளிகளின் அறைகளும் சரி — சுத்தமாகக் காட்சியளிக்கின்றன. கிட்டத்தட்ட 30 வருடம் முன்னால் மிகச்சிறிய அளவில் துவக்கப்பட்ட இந்த சென்டரில் நோயாளிகள் பெருகி வருகிறார்கள். மனம் வளர்ச்சியடையாத குழந்தைகளுக்கு ஒரு சிறு பள்ளி இருக்கிறது. தாய்ப் பாலின் மகிமை, குழந்தை வளர்க்கும் விதம் இவை பற்றி ஒரு திரைப்படம் காட்டவும் எண்ணம் இருக்கிறதாம்.

''வளர்ந்து வரும் மேல் நாடுகளில் கூட இப்போது தாய்ப்பாலின் முக்கியத்துவத்தை உணர்ந்திருக்கிறார்கள். 'யுனிசெஃப்' இதை அறிந்து, சர்வதேச அபிப்பிராயத்தை உருவாக்கி வருகிறது. 'புட்டிப் பால் உணவு'க்கு நாளாவட்டத்தில் தடை செய்வதாக இந்திய அரசாங்கமும் ஒப்புக் கொண்டது. ஆனால் காரியாம்சத்தில் நிறைவேற்ற முடியவில்லை!'' என்கிறார் ஒரு பிரபல டாக்டர்.

பப்ளிக் ஹெல்த் சென்டரையும், அங்கு வரும் தாய்மார்களின் முக மலர்ச்சியையும், (சொல்ல மறந்து விட்டோமே? ஒரு விஸிட்டுக்கான சார்ஜ் ரூ. இரண்டுதான்!) சலிப்புத் தெரியாத டாக்டர்களின் உற்சாகத்தையும் பார்க்கும்போது மனம் நிறைகிறது. அங்கு வரும் ஆரோக்கியமான குழந்தைகளைப் பார்க்கையிலோ 'தாய்ப் பாலுக்கு இவர்களை விட வேறு சிபாரிசே தேவையில்லையே?' என்று தோன்றுகிறது.

- சாருகேசி, தமயந்தி

---




## ஜகத்குரு ஆசி

நல்ல பண்புகளையும், குணங்களையும், பக்தியையும், விஞ்ஞான பூர்வமான அறிவுக் கதைகளையும், வேடிக்கையின் மூலம் பலவித நீதிகளையும் — கணக்குகளையும் — ஆலோசிக்கும் தன்மையையும் வளர்க்கும் நோக்கத்துடன் ''கோகுலம்'' மறுமலர்ச்சி பெற்றுள்ளதில் மிகுந்த சந்தோஷிக்கிறோம்.

பெற்றோர்கள் செலவைப் பார்க்காமல் ஒவ்வொரு மாதமும் இந்தப் பத்திரிகையைத் தங்கள் குழந்தைகளுக்கு வாங்கிக் கொடுத்துப் படிக்க உதவ வேண்டும். பள்ளிப் படிப்பு அடுத்த ஆண்டுக்கு உதவும் — கோகுலத்தில் வரக்கூடிய நிகழ்ச்சிகள் வாழ்நாள் முழுவதும் உதவிகரமாக இருக்கக்கூடியவை. குழந்தைகளும் நன்றாகப் படித்து, புத்தியை நல்ல வழியிலேயே வளர்த்துக் கொண்டு, நல்லவர்களாக வாழ்ந்து, வருங் காலம் நல்லதாக அமைவதற்கு முயல வேண்டுமென ஆசிர்வதிக்கிறோம்.

-காஞ்சி காமகோடி பீடாதிபதி
ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

---

**பிரதி மாதமும் கடைசி வாரக் கல்கியோடு கோகுலம் கிடைக்கும்.**




# அமைச்சர்கள் ரேஷன் கியூவில் நின்றால்...?

○ ஆர். ரகு, சங்கர்நகர்

? ஒன்பது மந்திரிகள் ராஜினாமா நல்ல ஸ்டண்ட் அப்படித்தானே?

! எம். ஜி. ஆரின் உண்ணா விரதத்தை விடவா?

? என் வேலைக்கான ஆர்டர் தயாராய் இருந்தும் பவர் கட்டினால் அது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. பவர் கட் எப்போ சார் முடியும்?

! தாற்காலிகமாக பருவ மழை பெய்ததும். நிரந்தரமாகப் பவர்கட் நீங்க வேண்டுமானால் எல்லாத் துறைகளிலும் அரசின் பவர், 'கட்' ஆகி 'கட்' ஆகியுள்ள மக்கள் பவர் அதிகரிக்க வேண்டும்.

○ ஆர். ராமகிருஷ்ணன், பம்பாய்

? ஹிந்தியை நீங்கள் எந்த அளவுக்கு ஆதரிக்கிறீர்கள்?

! ஒரு பிராந்திய மொழி என்ற அளவுக்கு.

○ ஏ. பி. மதிவாணன், சென்னை

? சமீபத்தில் மறைந்த தமிழிலக்கியக் காவலர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் பற்றித் தங்கள் கருத்து?

! பத்மஸ்ரீ, செந்தமிழ்ச் செல்வர், தமிழ்ப் பேரவைச் செம்மல் போன்ற பட்டங்களுடன், இப்போது நீங்கள் வழங்கியுள்ள 'தமிழிலக்கியக் காவலர்' பட்டமும் சேர்கிறது. இன்னும் பலவும் பெறத் தகுதியுடையவர்தான். ஏறக்குறைய 1750 நூல்களை இவர் வெளியிட்டதும் அவை ஆராய்ச்சி நூல்களாகவும் பண்டைய இலக்கிய நூல்களாகவும் அமைந்ததும் பெரிய காரியமில்லை. இவற்றைத் திறம்பட வியாபாரமும் செய்து சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தைச் செவ்வனே நடத்தி வந்ததுதான் பெரிய ஆச்சரியம். நாவல்களை சரியாக வியாபாரம் ஆவதில்லை என்று பல பதிப்பாளர்கள்குறைப்படும் போது, பண்டைய உயர் இலக்கியங்களை இல்லங்கள் தோறும் வாங்கச் செய்வதில் வெற்றி கண்டவர் அவர். வரிப் பணத்தில் ஏராளமான புத்தகங்களை வெளியிட்டு ஏராளமான நஷ்டமும் அடைந்து கொண்டிருக்கும் நேஷனல் புக் டிரஸ்ட், சாகித்ய அகாடமிபோன்றவை சுப்பையா பிள்ளையின் ஆற்றல் செயல்பட்ட விதத்தை உன்னி நோக்கிப் படிப்பினை பெறலாம்.

○ முல்லை. அழகன், மூலைக்கரைப்பட்டி

? அமைச்சர்களை ரேஷன் கியூவில் நிற்கவைத்தால்......?

! அந்தச் செய்தியையும் நாளிதழில் வரச் செய்து பிராபல்யம் தேடுவார்கள். ''மாறு வேடத்தில் மந்திரி! – நியாய விலைக் கடைகளைச் சோதனையிட்டார்....!''

○ பூவை தங்கபாரதி, மயிலம்பட்டி

? நடந்து முடிந்த சட்டசபைத் தேர்தல்களில் இ. காங்கிரஸ் தோற்றதும் தராக இந்திராவைத் தைரியமாகத் தாக்க ஆரம்பித்துள்ளாரே! அநியாயமில்லையா?

! நடந்து முடிந்த தில்லி தேர்தலில் இ. காங்கிரஸ் வென்றதற்கு இந்திராவை இதோ தராக வாழ்த்துகிறாரே இது நியாயமில்லையா? ஆசிய விளையாட்டுக்களை நடத்தியதும், அதையொட்டிப் புதுதில்லி புதுப்பிக்கப்பட்டதும், தேர்தலில் பணம் தண்ணீராய்ச் செலவானதும் காரணங்களெனப் பேசப்பட்டாலும் இவற்றினால் வெற்றியின் சிறப்பைக் குறைத்துவிட முடியாது. பிரதமரின் செல்வாக்கு அப்படியொன்றும் தேய்ந்து போய்விடவில்லை என்றும், கர்நாடக, ஆந்திர மாநில எதிர்ப்பு வோட்டுக்கள் முதல்வர்களுக்கு எதிரானதேயன்றி பிரதமருக்கு எதிரானதல்ல என்றும் தராசின் கணிப்பு சரியென்று தில்லி நிரூபித்துள்ளது. பி.ஜே.பி.யின் தோல்விக்குப் பொறுப்பேற்று வாஜ்பாயி ராஜிநாமாச் செய்தது அவர் மதிப்பை உயர்த்துகிறது.

○ வி. கே. துரைசாமி ஐயர், திருச்சி-5 ★

? மது, லாட்டரி, சூதாட்டம், லஞ்சம் போன்ற பாதகச் செயல்களை ஒடுக்க ஆட்சியாளர்கள் இராஜாஜி கடைப்பிடித்து வந்த நெறிமுறைகளைக் கையாண்டால் என்ன?

! அவரது அறிவாற்றலுக்கு இணையாக இன்று நாட்டில் யாரையும் காண முடியாது என்பது ஒருபுறமிருக்க, அவரது நேர்மையும் நல்லொழுக்கமும் அளித்த தார்மீக பலம் இன்று யாருக்குமே கிடையாது. அதனால் தான் அவரை எவராலும் பின்பற்ற முடியவில்லை.

○ பூவை கே. சந்திரன், பாண்டமங்கலம்

? நொறுக்குத் தீனி தின்பது நல்லதா?

! பற்களுக்கு நல்லது. உறுதிப்படும். ஆனால் வேளை தப்பிச் சாப்பிடக் கூடாது. மூன்று வேளையில் ஒரு வேளை சேர்த்துக் கொள்ளலாம். அளவாக உண்கிற மனோ பலத்தில் தான் தேக ஆரோக்கியமும் தொக்கி நிற்கிறது.

○ திருமதி காந்திமதி தேவநாதன், மதுரை-3

? சென்னா ரெட்டி பஞ்சாப் கவர்னர் பதவியைத்

துறந்ததற்கான காரணத்தை அறிந்தபோது ஆடி நன்னிறதே என்று ஒநாள் அழுத கதை, நினைவு வந்தது.... தராசுவுக்கு?

! 'ச்சீ! இந்தப் பழம் புளிக்கும்' கதை.

O இரணியல்கலை தூத்துக்குடி

? இந்திரா காந்தி தன் மகன்களை அரசியலில் புகுத்தியதைக் கண்டித்தவர்கள், ராமராவ் தன் மகனைத் திருப்பதித் தொகுதியில் நிறுத்துவது பற்றி வாய் திறக்கவில்லையே?

! ராஜீவ் – சஞ்சய் அரசியலுக்கு வந்ததை யாரும் ஆட்சேபிக்கவில்லை. அவர்கள் பிரதமரின் பிள்ளைகளாக இருப்பதால் உள்ள செல்வாக்கைப் பல வழிகளில் துஷ்பிரயோகம் செய்ததைத்தான் கண்டிக்கிறோம். அப்படி என். டி. ஆர். மகனும் இல்லாத அதிகாரத்தைத் தானே எடுத்துக் கொண்டால் கண்டிக்க வேண்டியதுதான். நிற்க, என். டி. ஆரைக் கண்டிக்க வேண்டிய ஓர் அம்சம் இருக்கிறது. மேலவையை ஒழிக்கிறேன் என்று புறப்பட்டிருக்கிறாரே அதுதான். மேலவைகளுக்கு நமது ஜனநாயகத்தில் மிக முக்கியமான பொறுப்புக்கள் உண்டு. அவை அத்தியாவசியமனவை. மேலவையை அறிஞர்களின் அவையாகத் திகழச் செய்யாமல் அவற்றின் தரத்தை நமது அரசியல்வாதிகள் குறைத்து விட்டார்கள் என்பது வேறு விஷயம்.

O எஸ். வி. ராஜசேகர், சென்னை-5

? ரயில்வே அமைச்சருக்கும், ரயில்வேபோர்டு சேர்மனுக்கும் இடையே கிளம்பிய பகை என்ன ஆயிற்று?

! குஜ்ராலுக்குச் சீட்டுக் கிழிக்கப் பட்டிருக்கிறது. அமைச்சர் சௌத்ரிக்கும் சீட்டுக் கிழிக்கப்படுவதில் கதை முடிவது நல்லது.

O பா. உதயா, சிந்தாதிரிப்பேட்டை.

? ஐ.ஏ.எஸ்., ஐ.ஜி. போன்ற பெரிய அதிகாரிகள் நம் அரசியல்வாதிகளிடம் சிக்கித் தவிப்பது பற்றி?

! சுதந்திரம் பெற்ற புதிதில் ஆட்சியில் அமர்ந்த அரசியல்வாதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் இடையில் நிலவிய உறவு முறை இன்று தலைகீழாக மாறி விட்டது. எது சரி, எந்த அளவுக்கு அதிகாரிகளுக்குச் சுதந்திரம் உண்டு, எந்த அளவுக்கு அமைச்சர்கள் அதிகாரிகளுக்குக் கட்டுப்பட வேண்டும் என்பன பற்றி இரு தலைமுறை அதிகாரிகள், அமைச்சர்கள் இடையே ஒரு விவாத அரங்கு நடந்து ஆரோக்கியமான ஒரு நடுவழிப்பாதை அமைக்கப்படல் வேண்டும்.

O எம். இராஜேந்திரன், லால்குடி

? அதிரசம் - அடுப்பு பற்றி சிவசங்கரி இப்படி எழுதலாமா?

! அது அதி-ரசமாகச் சிலருக்கு இருந்திருக்கும். பற்றி எரியும் அடுப்பாகச் சிலர் மனம் தகித்திருக்கும். பச்சையாக எழுதினாலும் பாதகமில்லை, சத்தியமாக எழுதுவதுதான் முக்கியம் என்ற மேல் நாட்டு நடைமுறையின் பாதிப்பு தற்காலத் தமிழ் இலக்கியத்தில் அதிகரித்து வருவதற்கு ஒரு சான்று. அருவருப்பு ஊட்டக் கூடியதென்றால் அருவருப்பான மனிதர்கள் நம்மிடையே இருந்தார்கள், இருக்கிறார்கள் என்பது சத்தியம் தானே என்பது வாதம். பத்திரிகைச் சுதந்திரம் என்ற அமுதத்தைக் கடைந்தெடுக்கும்போது கிளம்பும் விஷம்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
வி. கே. துரைசாமி அய்யர்,
59, தொண்டையம்பேட்டை அக்கிரஹாரம்,
திருவானைக்காவல்
திருச்சி 620.005

## ...ங்கள் கேட்டவை -தராசு



✖ வேலக்கீ



✖ சென்னா ரெட்டி





✖ சுப்பையா பிள்ளை

✖ சொக்கஜி

# மகசூலைப் பாதுகாக்கும் மகத்தான கூரை

நாடெங்கிலும், பெருகிவரும் தானியக் கிடங்குகளுக்கு
பெரும்பான்மையாக உபயோகப் படுத்தப்படுபவை
"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடுகளே.

Ramco

"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட்
தகடுகளும் மற்ற உபகரணங்களும் –
தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல
நிரந்தரமான பாதுகாப்புக்கும்கூட.

நமது நாட்டின் பொருளாதார
சுபிட்சத்திற்கு அடிப்படையானது
வேளாண்மை விளைபொருள்
உற்பத்தியே. இத்தகைய தானியச்
செல்வத்தைப் பத்திரமாக சேமித்து
வைக்கும் கிடங்குகளின் கூரைகளுக்கு
நாடு முழுவதும் உபயோகப்படுத்தப்
படுவது "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடுகளே.

அதி நவீன தொழில் நுட்பம் — மிகக்
கடுமையான தரக்கட்டுப்பாடு —
இவையே "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ்
சிமெண்ட் தகடுகள் நிரந்தரப்
பாதுகாப்பைத் தருவதன் இரகசியம்.



சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட்
739, அண்ணா சாலை, சென்னை-600 002. போன் : 82006
பரிபூரண விற்பனையாளர்கள் : ராஜா சாரிடி டிரஸ்ட்

CAS:SACL.6.87 TAMB

# ஜோஸியர் தங்கவேலு



**("இன்று முதல்வர்களாயுள்ள இருவருக்கும் ஜோஸியம் சொன்னேன். இரண்டும் பலித்து விட்டது!" என்று மகிழ்ந்தார் 'டணால்' தங்கவேலு)**

### எம். ஜி. ஆர்.

1935ம் ஆண்டு.

வேல் பிக்சர்ஸார் 'சதி லீலாவதி' படத்தை எடுத்துக் கொண்டிருந்த சமயம். அப்படத்தில் நடித்துக் கொண்டிருந்தார் எம். ஜி. ஆர். அவரது நெருங்கிய தோஸ்த்து நான்தான்.

நாங்கள் இருவரும் தினமும் ஆழ்வார்ப்பேட்டையிலிருந்து பிராட்வேக்கு ரிக்ஷாவில் போவோம்.

பிராட்வேயில் அப்போது நாடியா என்ற நடிகை நடித்த 'ஹண்டர்வாலி' படம் ஓடிக்கொண்டிருந்தது.

டிக்கட் ஒண்ணரையணா!

எனக்கும் சேர்த்து தினமும் டிக்கட் எடுப்பார் எம். ஜி. ஆர். ரிக்ஷா செலவையும் அவரே ஏற்பார். (அப்போதே தர்மவான் அவர்!)

ஆழ்வார்ப்பேட்டை சர்க்கிளில் அப்போது இவ்வளவு வீடு கிடையாது. படம் பார்த்து விட்டு இரவில் ஹாய்யாக அங்கே துண்டை விரித்துப் போட்டுப் படுப்போம்.

"டேய் தங்கவேலு, பாருடா! ஒரு பொம்பளை என்னமா சவுக்கடி கொடுக்குது? என்னமா ஸ்டண்ட் செய்யுது? ஐயோ — என் கை கால் துடிக்குதே! ஒரே வேகம் வருதுடா! எனக்கு மட்டும் சான்ஸ் கிடைச்சால் நல்லா இருக்குமேடா!" என்று முழங்கினார்.

"அண்ணே, உங்களுக்கு என்ன ஐம்பது அறுபது வயசா ஆயிடுச்சி? கவலைப்படாதீங்க. எதிர்காலத்திலே நீங்கதான் பெரிய ஸ்டார். இது நிச்சயம்" என்று சொன்னேன். அது பலித்தது!

### என். டி. ஆர்.

'பணம் படுத்தும் பாடு' படத்தில் என். டி. ராமராவுடன் நடித்தேன். நான் அவரை 'வாத்தியாரே' என்றுதான் கூப்பிடுவேன். அவரும் சில சமயம் 'வாத்தியாரே' என்று என்னைத் திருப்பிக் கூப்பிடுவார். இல்லா விட்டால் "மிஸ்டர் கே.ஏ.டி." என்பார்.

ஒரு நாள் மேக்கப் செய்து முடிந்ததும் சட்டையைக் கழட்டினார். அவரது முதுகின் வலது பக்கத்தில் ஒரு அரசிலை அளவு மச்சம்! அசந்துபோனேன்.

"அண்ணே — இந்த மச்சம் அர்ச்சுனனுக்கு இருந்ததாகப் புராணத்தில் படிச்சேன். ஆனால் இன்றுதான் நேரில் பார்க்கிறேன். நீங்களும் அர்ச்சுனன் மாதிரி பெரிய ஆளா வருவீங்க" என்றேன்.

அதே போல அவர் அர்ச்சுனன், ராமன், கிருஷ்ணன் ஆகிய வேடங்களில் நடித்தார். இன்று ஆந்திர மாநிலத்துக்கே முதல்வராகி விட்டார்.

அவர் எந்த செட்டிலிருந்தாலும் போய்ப் பார்ப்பேன்.

"ஏனய்யா! எனக்கோ நிறையப் பையன் இருக்கான். உனக்கோ நிறையப் பொண்ணு இருக்கு. நாம்ப சம்பந்தியாகி விடுவோமா?" என்பார் தமாஷாக. சிரிப்போம்.

என். டி. ஆருக்கும், எம். ஜி. ஆருக்கும் நான் ஜோஸியம் சொன்னது ஒரு புறமிருக்கட்டும். இன்று அவ்விருவரும் கோடானு கோடி மக்களின் எதிர் காலம் பற்றி ஜோஸியம் சொல்லும் நிலையில் இருக்கிறார்கள். அவர்கள் ஜோஸியமும் பலிக்க வாழ்த்துவோம்!

- பேட்டி: மன்னை சௌரிராஜன்

# உலகத்துக்கு ஒரு புதுமை!

இந்த 1983ல், காந்திய நெறியிலான தொழிற் சங்க இயக்கம் ஒன்றை வெற்றிகரமாக ஒரு மனிதர் நடத்தி வருகிறார் என்றால் ஆச்சரியமாயில்லை? ''சட்டம் தொழிலாளருக்கு வேலை நிறுத்தம் செய்யும் உரிமையை வழங்கியுள்ள போதிலும், எங்கள் தொழிற் சங்க விதிகளில் ஸ்டிரைக் என்ற சொல்லையே நிரந்தரமாக நீக்கிவிட்டோம்! ஒவ்வொரு இந்தியத் தொழிலாளியும் தன்னால் இயன்ற அளவு நாட்டின் மேம்பாட்டுக்காக உழைத்தே ஆகவேண்டும். இந்தியா பொருளாதார ரீதியாக முன்னேற வேண்டுமானால், ரயில்வே போக்கு வரத்து ஒரு நாளும் சீர்கெட்டு விடக் கூடாது. ''காந்தியத் தத்துவங்கள் நம் நாட்டுக்கு இன்று அவசியம் தேவை!''

அறுபதாயிரம் அங்கத்தினர்களுக்கும் மேற்பட்ட தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் சங்கத்தின் தலைவர் டீ. வி. ஆனந்தன் இப்படி சொல்லச் சொல்லக் கொஞ்சம் நம்ப முடியாமலே இருந்தது. ஆனால் கண்ணுக்கு மெய்யாக நிரூபிக்கிறார் ஆனந்தன், 'கிருஷ்ண மூர்த்தி – குருசாமி' நினைவு தொழிற்சங்க தொழில் நுட்பக் கல்லூரியை, பெரம்பூர் பேப்பர் மில்ஸ் சாலையில் சமீபத்தில் துவக்கிய தன் மூலம். தொழிலாளர்களின் பணத்தைக் கொண்டு வாங்கிய ஒன்பதரை ஏக்கர் நிலப் பரப்பில் தொழிலாளர்களே மனமுவந்து வருடா வருடம் அளித்த அன்பளிப்புத் தொகையைக் கொண்டே எழுப்பப்பட்டிருக்கும் பிரும்மாண்டமான கட்டிடம் கம்பீரமாகத் தோற்றமளிக்கிறது. முதல் கூடத்தின் நுழைவு வாயிலில் நம்மை வரவேற்கும் பலகை: நன்னடத்தை உருவாக்கும் பயிற்சி வகுப்புக்கள்; இரண்டாம் கூடத்தில் காந்திய தொழிற் சங்கத் தத்துவ வகுப்புக்கள்!

இந்தப் புதுமையான கல்லூரியில் (உலகிலேயே இது மாதிரியான ஒரு நிறுவனம் கிடையாது!) முதன் முதலாக 71 ரயில்வே தொழிற்சங்க அலுவலர்களுக்குப் பயிற்சி அளிக்கப் போகிறார்கள். 1200 தொழிற் சங்க அலுவலர்களும் பிறகு படிப்படியாக இங்கே பயிற்சி பெறுவார்கள்.

தொழிற் சங்கக் கல்வியை அடுத்து ஜூலை முதல் தொழில் நுட்பக் கல்வியும் பயிற்றுவிக்க இருக்கிறார்கள். தொழிற் பயிற்சிக்கான கட்டடம் ஜூன் மாதத்துக்குள் முடிந்துவிடுமாம்.

ராமகிருஷ்ண மடத்துத் துறவிகளையும், காஞ்சிப் புதுப் பெரியவரையும் இங்கே சொற்பொழிவாற்ற அழைத்திருக்கிறாராம். ''நல்ல எண்ணங்களே ஒரு குடிமகனை நல்ல குடிமகனாக்கும்'' என்கிறார் ஆனந்தன்.

சுவாமி ரங்கநாதானந்தா, கிரிதாரி பிரசாத் எல்லாரும் இவரது சிறப்புப் பேச்சாளர் பட்டியலில் இடம் பெற்றிருக்கிறார்கள்.

தொழிற் சங்கக் கல்விக் கல்லூரியை துவக்கி வைக்க இவரது அழைப்பை ஏற்று வந்த புகழ் வாய்ந்த பிரமுகர் ஒருவரை, அவரது இருப்பிடத்தில் திரும்பக் கொண்டு போய் விட்டதும், ''ஆனந்தன், இந்தத் தொழிற்சங்கக் கல்விக்கூடத்தைத் தொடங்க ஆரம்பத்தில் எத்தனை செலவாகும்?'' என்று கேட்டாராம்.

''ஐம்பதாயிரம் ஆகும் என்று எதிர்பார்க்கிறேன் ஐயா!'' என்றார் ஆனந்தன்.

''கொஞ்சம் இரு!'' என்று உள்ளே போனவர், வெளியே வந்தவுடன் ஆனந்தன் கையில் ஒரு 'செக்'கைக் கொடுத்தார்:

பிரசாந்தி நிலையம் ஸ்டேட் பாங்க் செக்— எண்: ஏ.ஓ. 049214, தேதி 19.1.83, தொகை ரூ. ஒரு லட்சம்!

மணி மணியாக முத்துக் கோத்தாற் போல் காசோலையில் கையொப்பம் இட்டுத் தந்தவர் ஸ்ரீ சத்ய சாயி பாபா.

- எஸ். விசுவநாதன்

# விபத்துகளில் நஷ்டஈடு

## சட்டம் என்ன சொல்கிறது?

திருமதி அம்மு பாலசந்திரன் வழக்கறிஞராகப் பணிபுரிபவர். குறிப்பாக விபத்துக்களுக்கான நஷ்ட ஈடு வழக்குகளில் தீவிர ஆர்வம் செலுத்தி, அது சம்பந்தமான கட்டுரைகள் எழுதியுள்ளார்.

அவரிடம் சில கேள்விகள்:

**நஷ்ட ஈடு கொடுக்கிறார்களே, அந்தத் தொகையை எவ்விதம் கணக்கிடுகிறார்கள்?**

நடுத்தர வயதில் ஒரு மனிதர் விபத்தினால் மரணமடைகிறார் என்று வைத்துக் கொள்வோம். அவருடைய வயது, உத்தியோகம், ஆயுட்காலம் (சராசரி) தேக ஆரோக்கியம்—இவை எல்லாவற்றையும் வைத்து நஷ்ட ஈடு நிர்ணயிக்கப்படுகிறது. மேலும் அந்தக் குறிப்பிட்ட நபருக்கான தனிப்பட்ட செலவு (உயிரோடு இருந்தால்) பி. எஃப், கிராச்சுட்டி இன்ஷூரன்ஸ் எல்லாவற்றையும் நஷ்டஈட்டிலிருந்து கழித்துக் கொள்வார்கள்.

பி. எஃப், இன்ஷூரன்ஸ் போன்ற சலுகைகளைக்கழிப்பது பற்றி கோர்ட்டுக்குக் கோர்ட் மாறுபட்ட அபிப்பிராயம் இருந்து வருகிறது. நஷ்டஈட்டை நிர்ணயிக்கையில் — இத்தகைய சலுகைகளைக் கணக்கில் எடுத்துக்கொள்ளக் கூடாதென்று பஞ்சாபில் ஒரு தீர்ப்பு ஆகியிருக்கிறது.

**ஒரு மாணவன் இறந்துபோனால் நஷ்ட ஈடு எவ்விதம் தருகிறார்கள்?**

குடும்ப அந்தஸ்து, பள்ளியில் வாங்கிய மதிப்பெண், ஆசிரியரின் கருத்து, மாணவனின் தேக ஆரோக்கியம் ஆகிய எல்லா அம்சங்களையும் கவனத்தில் வைத்துக்கொண்டு நஷ்ட ஈடு நிர்ணயம் செய்வார்கள். என் அனுபவத்தில் கண்டது இது: பொதுவாக ஆரம்ப சோகம் மறைந்தவுடன் மனிதர்கள் பேராசைக்காரர்களாகி விடுகிறார்கள்! மிகச் சாதாரண ஏழைக் குடும்பத்துப் பெண் ஒருத்தியின் மகன் விபத்தில் இறந்து விட்டான். சில மாதங்கள் வரை ''நஷ்ட ஈடு ஒன்றுமே வேண்டாம்; பிள்ளையை வைச்சுச் சம்பாதிக்க இஷ்டம் இல்லே'' என்று சொல்லிக் கொண்டிருந்தவள் அப்புறம் மூன்று லட்சம் கோரினாள். பிள்ளை படிப்பில் மகா புத்திசாலி என்றாள். ரிகார்ட்ஸைப் பார்த்தால் ஃபெயில் ஆகித் தேறியிருந்தான். வெறுத்துப் போய் அந்தக் கேஸை விட்டுவிட்டேன்.

**விபத்து மரணமடைந்தவனின் அஜாக்கிரதையினால் நேர்ந்தால்?**

யாருமே வேண்டுமென்றே மாட்டிக்கொள்வது இல்லே. விபத்தினால் மரணமடைந்தவன், காரணகர்த்தா இரண்டு பேருடைய கவனக் குறைவும் எந்த அளவு இருக்கிறது (Contributary negligence) என்பதைக் கோர்ட் முடிவு செய்து – அதற்கு ஏற்றாற்போல் நஷ்ட ஈடு கொடுப்பார்கள்.

**மெகானிக் ஒரு வண்டியை ஓட்டிப் பார்க்கும்போது விபத்து நேர்ந்தால் யார் நஷ்ட ஈடு கேட்பார்கள்?**

கொஞ்சம் சிக்கலான கேள்வி. வண்டிச் சொந்தக்காரர் கராஜ் ஓனரிடம் நஷ்ட ஈடு பெறலாம். பதிலுக்குக் கராஜ் முதலாளி விபத்துக்கு உள்ளாக்கினவரிடம் கேட்கவேண்டும். ''இது போன்ற விபத்துக்கு நாங்கள் பொறுப்பல்ல'' என்று பில்லில் போட்டிருந்தாலும் கோர்ட்டில் அதுசெல்லாது. இதைச் சட்ட மொழியில் Vicarious liability என்று கூறுவார்கள்.



அம்மு பாலச்சந்திரன்

**விபத்துக்கான நஷ்ட ஈடு பெறுவதில் உங்கள் பொதுவான அறிவுரை என்ன?**

விபத்துக்கு ஆளானவர் உடனே ஒரு விண்ணப்பம் (கோர்ட்டில் 25 பைசாவுக்குக் கிடைக்கிறது.) வாங்கி, போலீஸ் ஸ்டேஷனிலோ, — கோர்ட்டிலோ கொடுத்து விட வேண்டும். (ஆறு மாதத்துக்குள்) ஒரு விஷயம்: மற்றவரின் கவனக் குறைவால்தான் — அஜாக்கிரதையால்தான் தனக்கு விபத்து நேர்ந்துள்ளது என்பதை நிரூபிக்க வேண்டும்.

ஒரு நிகழ்ச்சி ஞாபகம் வருகிறது: ஒருவர் கார் விபத்தில் சிக்கி 'பிராக்ச'ருக்கு உள்ளானார். கார் ஓட்டியவர் ''எவ்வளவு செலவானாலும் தருகிறேன்'' என்றார். நண்பரும் நம்பி ஆர்த்தோபீடிக் சர்ஜனிடம் சென்று குணப்படுத்திக் கொண்டார். செலவு ரூ. 3000 ஆயிற்று. பெரிய மனிதரோ ''ஆயிரம் ரூபாய்க்கு மேல் தர முடியாது. வீட்டிலிருந்து ஆஸ்பத்திரிக்கு டாக்ஸியில் போய் வந்த செலவை யெல்லாம் நான் ஏற்க முடியுமா?'' என்று கோர்ட்டில் வாதாடி வெற்றியும் பெற்று விட்டார். ஆரம்பத்திலேயே ரிப்போர்ட் தந்திருந்தால் நீதி மன்றம் ஓரளவு நியாயம் பெற உதவியிருக்கும்.

பேட்டி: **தமயந்தி**

ஆந்திராவில்
ஆசிரியர்கள்
'டியூசன்'
சொல்லித்தர
தடை

-செய்தி

தமிழ்நாட்டில்
இந்த தடை
வந்தால்.....

கருத்து:
பூவை கார்த்திக்பாலா













Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy. Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani
Editor: K. Rajendran

பெண்கள் தங்கள்
மனோபாவங்களை
அநேக அழகான வழிகளில்
வெளிப்படுத்துகிறார்கள்.
விமல் அவற்றில் ஒன்று.




100% பாலியெஸ்டர் புடவைக